சத்குருப்யோ நமஃ

ஸ்ரீ சுரேஸ்வராசாரியரவர்கள்

சம்ஸ்கிருதத்தில்

கத்திய பத்திய ரூபமாக வியற்றிய

# நைஷ்கர்ம்ய சித்தி.



இது

கோவிலூர் மடாதிபதி

திருக்கள ராண்டவ ரென்னும்

ஸ்ரீ வீரசேகர ஞாந தேசிக சுவாமிக ளவர்களின்

பாதசேகரராய

**ஸ்ரீ காசிகாநந்த சுவாமிக ளவர்களால்,**

தமிழில் வசந வடிவமாக

மொழிபெயர்க்கப்பட்டு,

மங்கலம் - ஷண்முக முதலியாரால்,

சென்னை, கோமளேசுவரன் பேட்டை,

சச்சிதாநந்தம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.



காப்பிரைட்] 1915 [விலை அணா எட்டு.

24-5

# முகவுரை.

---

உலகத்தின்கண் சகல ஜீவர்களாலும் ஜனன மரண சம்சார ரூப துக்க நிவிர்த்தியின்பொருட்டுத் தர்மார்த்த காம மோக்ஷமென்னும் புருஷார்த்தம் நான்கனுள் மோக்ஷமே ஒரு தலையாக விரும்பப்படுவதாம். அவ்வித மோக்ஷமும் சாதநங்களா னன்றி யுண்டாகாமையின், அது சாதநத்தை யபேக்ஷிக்கின்றது. அதற்குச்சாதநம் சிலர் கர்மமென்றும், மற்றுஞ் சிலர் ஞாந மென்றும், பின்னுஞ் சிலர் ஞாந கர்ம சமுச்சிதமென்றும், வேறு சிலர் கர்ம ஞாந முச்சிதமென்றுங் கூறுகின்றனர். இவற்றுள், எது சாதநமாகுமெனத் தரிசனக் கிரந்தங்க ளொழிந்த மற்றப் பிரகரணக் கிரந்தங்களாற் றுணியப் பெருமையின், அதனைத் துணிவான் நர்மதா நதத்தின் தீரத்தி லுள்ள மாஹிஷ்மதி யென்னும் பட்டணத்தில் விஸ்வரூபர் என்னும் பெயரோடு மண்டநமிசிர ரெனப் பிரசித்தி பெற்றுக் கர்ம காண்டியாயிருந்து, 18 நாள் ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகளோடு அரிய சாஸ்திரார்த்தவாதம் செய்து, ஷெ சுவாமிகட்குச் சிஷ்யராய்ச் சுரேஸ்வராசாரிய ரென்று நாமம் பெற்று, சிருங்ககிரி மடாதிபதியா யெழுந்தருளியிருந்த மஹான் கேவலம் ஞாநமே மோக்ஷ சாதநம், கேவல கர்மமும், ஞாந கர்ம சமுச்சிதமும், கர்ம ஞாந சமுச்சிதமும் சாதந மல்ல வென்றும், தத் த்வ மசி மஹா வாக்கியத்தானே வாக்கியார்த்த ஞாநமுண்டாய் மோக்ஷ முண்டாகின்றது என்றும் கத்திய வடிவமாயும் 423 பத்திய வடிவமாயும், நான்கத்தியாயங்களால் நன்கு நிரூபித்து, நைஷ் **கர்ம்ய சித்தி** என்னும் பெயருடன் ஓரரிய பெரிய நூலைச் சம்ஸ்கிருதத்தில் அதிக காம்பீர்யம் வாய்ந்ததாகச் செய்தருளினர். இந்நூல் இஷ்ட சித்தி, அத்வைதப் பிரஹ்ம சித்தி, அத்வைத சித்தி, ஸ்வாராஜ்ய சித்தி என்னும் நான்கிற்கும் முன் செய்யப்பட்ட சித்தியா யிருக்கின்றது. வேதாந்த பண்டிதர்கள் இதனை மூலமாகக் கொண்டு அநேக சம்ஸ்கிருத நூ லியற்றியிருக்கின்றனர். இந்நூலின் அருமை பெருமைகளை நோக்கியும், இதுகாறும் இது தமிழில் வாராமையை நோக்கியும், தமிழ் மக்கள்

மாட்டுள்ள கருணையால் ஸ்ரீ கோவிலூர் மடாதிபதியா யெழுந் தருளியிருந்த திருக்கள ராண்டவ ரென்னும் ஸ்ரீவீரசேகர ஞான தேசிக சுவாமிக ளவர்களின் பாத சேகரராய * **ஸ்ரீ காசிகாநந்த சுவாமிக ளவர்கள்** செந்தமிழில் செவ்விய வசந வடிவமாக மொழிபெயர்த்தருளினர்.

ம. ச.



* இவர் பேததிக்காரமும்-சத்கிரியை யென்னும் உரையும், வியாஸ தாத்பரிய நிர்ணயமும், மண்டலப் பிராஹ்மணோப நிஷத்தும்-ராஜயோக பாஷ்யமும், தர்க்க சங்கிரகமும் - தர்க்க சங்கிரக தீபிகையும், வேதாந்த முக்தாவலியும், ஹரிமீடை-ஹரி தத்வ முக்தாவலியும் தமிழில் வசந வடிவமாக மொழிபெயர்த் திருக்கின்றனர்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 2 | வுரழ | வுறழ |
| ,, | 10 | ஸ்தம்பரி | ஸ்தம்ப பரி |
| ,, | 16 | முல | மூல |
| 4 | 23 | பிரகரணர்த் | பிரகரணர்த் |
| 6 | 6 | ஆரப்பிக்கப்பட்ட | ஆரம்பிக்கப்பட்ட |
| 10 | 8 | மொக்ஷத்தை | மோக்ஷத்தைக் |
| 11 | 11 | பிரவிர்த்தி | பிரவிர்த்தி |
| 15 | 16 | ஹேதுக்காளல் | ஹேதுக்களால் |
| 17 | 19 | மரிக்ருன் | மரிக்கின்ருன் |
| 18 | 25 | ஈஸ்வரார்பித | ஈஸ்வரார்ப்பித |
| 20 | 4 | சுத்தியின்பொருட்டு | சுத்தியின்பொருட்டுச் |
| ,, | 18 | சர்வகாம | சர்வகர்ம |
| 53 | 16 | பின்னற் | பின்னர்க் |
| 54 | 19 | னின்றும் | னின்று |
| 63 | 13 | கிரக்கிக் | கிரகிக்க |
| 72 | 22 | சிததித்த | சித்தித்த |
| 73 | 8 | அதற்கு | அதற்குச் |
| 79 | 25 | சித்திக்கிறன | சித்திக்கின்றன |
| 88 | 9 | செயயப்பட்ட | செய்யப்பட்ட |
| 91 | 19 | ஆவிாப்பாவ | ஆவிர்ப்பாவ |
| 93 | 12 | அபேரோக்ஷ | அபரோக்ஷ |
| 97 | 4 | வியதிரோ | வியதிரேக |
| 99 | 15 | என்னு | என்னும் |
| 102 | 1 | எனனும் | என்னும் |
| 103 | 6 | சத்துத்தனமை | சத்துத்தன்மை |
| 109 | 18 | அத்மாவினிடத்து | ஆத்மாவினிடத்து |

| | | | |
|---|---|---|---|
| 111 | 20 | அகாசத்தை | ஆகாசத்தை |
| 113 | 11 | விசாரி | விசார |
| 116 | 22 | சிவரணுதி | சிரவணுதி |
| 118 | 9 | அத்மாவும் | ஆத்மாவும் |
| 121 | 16 | கானற் | கானல் |
| 135 | 9 | நின்மாலமாயும் | நின்மலமாயும் |



## ஆசார்ய ஸ்துதி.

---

𑌹𑍃𑌦𑌯𑍇 𑌕𑌲𑌯𑍇 𑌵𑌿𑌮𑌲𑌂 𑌶𑌰𑌣𑌂 ।
𑌭𑌵 𑌶𑌂𑌕𑌰𑌦𑍇𑌶𑌿𑌕 𑌮𑍇 𑌶𑌰𑌣𑌂 ॥

𑌅𑌤𑌿𑌦𑍀𑌨𑌮𑌿𑌮𑌂 𑌪𑌰𑌿𑌪𑌾𑌲𑌯 𑌮𑌾𑌂 ।
𑌭𑌵 𑌶𑌂𑌕𑌰𑌦𑍇𑌶𑌿𑌕 𑌮𑍇 𑌶𑌰𑌣𑌂 ॥

𑌶𑌰𑌣𑌾𑌗𑌤𑌵𑌤𑍍𑌸𑌲 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌧𑍇 ।
𑌭𑌵 𑌶𑌂𑌕𑌰𑌦𑍇𑌶𑌿𑌕 𑌮𑍇 𑌶𑌰𑌣𑌂 ॥

𑌶𑍍𑌰𑍁𑌤𑌦𑍇𑌵 𑌵𑌿𑌧𑍇𑌹𑌿 𑌕𑍃𑌪𑌾𑌂 𑌸𑌹𑌜𑌾𑌂 ।
𑌭𑌵 𑌶𑌂𑌕𑌰𑌦𑍇𑌶𑌿𑌕 𑌮𑍇 𑌶𑌰𑌣𑌂 ॥



## பாயிரம்.

---

திகழ்தரு முலகைப் படைத்ததன் பின்னர்ச்
செவ்வனே காத்துமிங் கழித்தும்,
இகழ்தரு மவற்றின் றொழிலிற்பற் றின்றி
யிருப்பினுங் கருணையி னாலே,
புகழ்தரு கின்ற சிதம்பர மதனிற்
போற்றவே நடம்புரி கின்ற,
இகழ்தலில் நடன ராஜனற் றுளா
மிணைமல ரகமலர் வைப்பாம்.

சீருறு மாதி வியாசவெம் மிறையின்
செய்யபா டியந்தனை வரைந்த,
பேருறு மமல சங்கர குருவின்
பெருமுத்தி ராமலிங் கேசன்,
தேசுறு மருணு சலகுரு வினினற்
சிதம்பரா ரியனடி களையே,
மாசுறு மெந்த மகந்தனிற் கொண்டு
மாற்றுவம் பவக்கட லினிதே.

புகழ்தருங் கலைக ளெவற்றினு முயர்வாம்
பூர்வமீ மாஞ்சையிற் புலமை,
நிகழ்தரும் பிரம சூத்திரப் பொருளை
நிகழ்த்துசங் கரவிறை கருத்துத்,
திகழ்தரு மமல நைஷ்கர்ம்ய சித்தி
யாதியாச் சிறந்தநூ லீந்த,
புகழ்தருங் குருவாஞ் சுரேஸ்வரா சானைப்
போற்றியே பணிந்திட ரொழிப்பாம்.

சீவர்க ளிடத்திற் கருணையுஞ் சிறந்த
சிவனிடம் பத்தியுஞ் செம்மை,
யாவதாந் துறவு மரியமெய்ஞ் ஞாந
மாகிய நான்குமே யொன்றாய்த்,
தாவுத வின்றி யீட்டமா யுதித்த
தன்மையா ரெமதரு ளிறையாம்,
மேவரும் வீர சேகர ஞாந
விமலனற் பதங்களைத் தொழுவாம்.

ஆரா றாறுந் தத்துவமா
மகில வுலகா மவித்தையினுள்
தேரார் நீக்கா வகங்கரத்தைத்
தெளிவாய் நீயன் றெனச்சீராய்ப்
பேரா வார்வ நிறைமொழியைப்
பெட்பா யெமக்கிங் குணர்த்தியருள்
பேரார் வீர சேகரனற்
பெருமான் றனையே பேணுதுமால்.

சங்கர குரவ னாஞ்ஞையாற் றவத்தாற்
றடையிலாச் சுரேஸ்வரா சானன்,
இங்குயாப் பதனு ணூற்சதத் தோடே
யிருபத்து மூன்றுகத் தியத்தும்,
அங்கடங் காம லெஞ்சிய வற்றை
யறைந்துநான் கத்தியா யத்தில்
தங்குநைஷ் கர்ம்ய சித்தியைத் தமியேன்
சமைத்தனன் கத்தியந் தனிலே.





ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

சற்குருப்யோ நமஃ.

# நைஷ்கர்ம்ய சித்தி.

எதனினிற் காநிலாக் கிநியப்புத் தரித்திரி
யிவைவவரைச் சிருக்கர வுரழ,
அதினினுண் டாகு மகத்திற்குச் சாட்சி
யாயுமஞ் ஞானமின் றியசித்,
இதனினு மரியைச் சிரமிசைக் கொண்டு
செய்யசு ரேஸ்வரா சானால்,
இதமதாக் கூறுநைஷ் கர்ம்மிய சித்தி
செய்குவன் றென்மொழி தனிலே.

## முதலத்யாயம்.



பிரஹ்மாமுதல் ஸ்தம்பரியந்தமான சர்வப்பிராணிகட்கும் சர்வப் பிரகாரத்தாலும் துக்கம் ஸ்வபாவமாகவே விடவேண்டு மென்னு மிச்சை யிருத்தலின், அதன் நிவிர்த்தியின்பொருட்டுச் ஸ்வபாவமாகவே பிரவிர்த்தி யிருக்கின்றது;

துக்கமும் தேகத்தைக் கிரகிக்கும் முக்கிய காரணமாகலின்; தேகமும் பூர்வஞ்செய்த தர்மாதர்ம மூல

மாகலின் நாசமாவ தின்று. அவையும் விகித நிஷித்த கர்ம மூல மாகலின், நிவிர்த்தியாவ தில்லை. கர்மமும் ராகத் துவேஷ ஆஸ்பத மாகலின், ராகத் துவேஷங்களும் நன்று தீ தென்னும் அத்தியாச காரண மாகலின், அத்தியாசமும் அவிசாரத்தால் சித்தித்த துவைத வஸ்து நிமித்தமாகலின்; துவைதமும், சுத்திகா ரஜதாதி போன்று சர்வமும் ஸ்வதசித்த அத்விதீய ஆத்ம அஞ்ஞானமாத்ர உபாதான மாகலின் நிவிர்த்தியாவ தின்று. இதனுல், சர்வ அனர்த்தத்திற்கும் காரணம் ஆத்மாவை யறியாமையே யாகும்.

பரதந்திர மின்றியும், உதய அஸ்தமன மின்றியும் உள்ள சுகம் ஆத்ம ஸ்வபாவ மாகலின், அதன் அறியாமை மறைப்பாம். இதனுல் அஃது அத்தியந்த நாசமாகுங்கால் சர்வ புருஷார்த்தமும் நன்கு பிராப்த மாகின்றன. அஞ்ஞான நிவிர்த்தியும் சம்பக்ஞான சொரூப லாப மாத்ர காரண மாகலின், அதன் கிரகணம் பொருந்துகின்றது.

சர்வ அனர்த்த காரண ஆத்மாஞ்ஞான விஷயத்திற்கும் ஆகம சம்பந்த மின்றிய பிரத்யட்சாதி லௌகிகப் பிரமாண விஷய மின்மையின், வேதாந்த ஆகம வாக்கியத் தானேயே சம்யக்ஞான முண்டாகின்றது. இக்காரணத்தால் இச் சர்வ வேதாந்த சார சங்கிரகப் பிரகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது.

> இப்பிரகரணத்தில் இச்சிக்கப்பட்ட அர்த்த மானது சிஷ்ட பரம்பரையாற் கிரகித்தற் பொருட்டும், பிரகரணார்த்தத்தை நன்கு சூசிப்பித்தற்பொருட்டும், இம்முதற் சுலோகம் ஆரம்பிக்கப்படுகின்றது.



1. எதனி னின்றும் ஆகாசம், வாயு, அக்நி, அப்பு, பிருதிவி பர்யந்தமான வஸ்துக்கள் மாலையி னிடத்துச் சர்ப்பம் போன்று உண்டாயினவோ, அந்த அஞ்ஞான மின்றிய சித்ரூபமாயும், புத்தி சாட்சியாயுமுள்ள அரியின் பொருட்டு நமஸ்காரம்.

> தனது சம்பிரதாயத்திற்கு விதிக்கப்பட்ட பிரமாண பூர்வகத்தன்மையை யறிவுறுத்தற்பொருட்டு விசிஷ்ட குணசம்பந்த சங்கீர்த்தன பூர்வகம் குருவினது நமஸ்காரக் கிரியை காண்பிக்கப்படுகின்றது.

2. எவரிடத்தி னின்றும் அந்நியவிடத்தில் அதிசயத்தை யடையாது * தம மெனக்கூறும் ஞானங்கள் நீங்கிவிட்டனவோ அந்த அவித்தையாகிய கிரந்தியைப் பேதிக்கும் சிரேஷ்டமான குருவின்பொருட்டு நமஸ்காரம்.

> நமஸ்கார நிமித்தமாகிய தனது அபிப்பிராயத்தை வெளிப்படுத்துதற்பொருட்டு இச் சுலோகம் கூறப்படுகின்றது.

3. வேதாந்தங்களுள் மறைபட்டிருப்பதாயும், சம்சாரத்தை நிவிர்த்திக்கும் வஸ்து சம்பந்தமாயுமுள்ள ஞானமானது அந்நியர்களால் விஸ்தாரஞ் செய்யப்பட்டிருப்பினும், "உன்னுல் கிரந்தஞ் செய்யத்தக்கது" என்னும் குரு ஆஞ்ஞையால் கூறுகின்றேன்.

> எவ் விஷய முடைய பிரகரணம் இஃதெனின், அது கூறப்படுகின்றது.

4. எது சித்திக்கில் இந்தப் பிரமாதா முதலியன சித்திக்கின்றன, எதன் சித்தி யின்றி ஒன்று மின்

* தமம் = உயர்வு.

ரோ அந்தப்பிரத்யக் தர்ம முக்கிய யதார்த்தத்தை ஸ்பஷ்டமாகக் கூறுவேன்.

கூறவேண்டு மென்னு மிச்சை யுடைய பிரகரணார்த்தத்தில் ருசி உண்டாக்குதற் பொருட்டு † அநுக்த துருக்த அப்பிராமாண்ய காரண சங்கை நிவிர்த்தி வாயிலாய்த் தனது குருவின் பிராமாண்ய வர்நநம் செய்யப்படுகின்றது.

5. குரு உரைத்த வேதாந்த சித்தாந்தத்தில் சக்தியின்மையால் அதிகமாய்க் கூறேன். சகஸ்திர கிரணங்களை யுடைய சூரியன் பிரகாசிக்கு மிடத்து மின்மினிப் பூச்சி எதைப் பிரகாசிப்பிக்கும்?

குருவினால் வேதார்த்தம் சமாப்தி செய்யப் பட்டிருத்தலின், பிரகரணமுரைக்கின், கியாதியாதி அப்பிராமாண்யகாரண ஆசங்கை யுண்டா மெனின், அதன் நிவிர்த்தியின்பொருட்டு உபந்நியாசஞ் செய்யப்படுகின்றது.

6. நம்மால் கியாதி லாப பூஜையின்பொருட்டுக் கிரந்தம் செய்யப்படவில்லை; பிரஹ்மவித்துக்களாகிய உரைகல்லில் தனது ஞான பரிசுத்தியின்பொருட்டுச் செய்யப்படுகின்றது.

அநர்த்தம், அநர்த்த காரணம், புருஷார்த்தம், புருஷார்த்தகாரணமாகிய பிரகரணார்த்தத்தைச் சங்கிரகமாக அறிவுறுத்தற்பொருட்டு உபந்யாசஞ் செய்யப்படுகின்றது.

---

† அநுக்தம் = கூறாதது; துருக்தம் = கஷ்டத்தால் கூறுவது.



7. எது ஏகாத்மத்தன்மையை யறியாதும், தனதாத்மாவின் அநுபவத்தை ஆஸ்ரயித்து மிருக்கும், அஃது அவித்தை; சம்சாரத்திற்குக் காரணம்; அதன் நாச மானது ஆத்மாவிற்கு மோட்சமாம்.

புருஷார்த்த காரணம் ஒன்றே எஞ்சுதலின், அது கூறப்படுகின்றது.

8. வேதத்தின் முடிவான வாக்கியத்தினின்று முண்டான நல்ல ஞானமாகிய அக்நியானது ஆத்மாவினது மோகத்தை அத்யந்தம் தகிக்கின்றது. கர்மமானது அப்பிரதிகூலத்தால் தகிப்பதின்று.

பிரதிஞ்ஞை செய்யப்பட்ட அர்த்தத்தின் சுத்தியின்பொருட்டுப் பூர்வ பட்சம் கூறப்படுகின்றது. அவற்றுள், ஞானத்தை அங்கீகரித்தே உபந்நியாசஞ் செய்யப்படுகின்றது.

9. கிரியைகளால் மோட்சம் சித்தித்தலின், அவ்விடத்து ஞானம் என் செய்யும்? எங்ஙன மெனின், சாவதான மனதுடையவனாய் அவ்வெல்லா வற்றையும் கேட்பாயாக.

10. காமிய கர்மத்தைச் செய்யாது, நிஷித்த கர்மத்தை விட்டு, நித்திய நைமித்திய கர்மத்தை விதிபோன் றநுஷ்டிக்கும் புருஷனுக்கு முக்தி யுண்டாகின்றது.

இதனால் யாது உண்டாம்?

11. அதனால் இவனைக் காம்ய கர்ம பலமான தேவத்தன்மை ஸ்பரிசிப்ப தின்று; இவன் நிஷித்த கர்மத்தைத் தியாகஞ் செய் திருத்தலின், கீழ் ஜன்மமாகிய நரகத்தன்மையை யடைவ தில்லை.

தேகாரம்பகமான தர்மா தர்மங்கள் ஞானிகளுடன் கர்மிகட்கும் சங்கை சமாதானங்கள் சமானமேயாம்.—

12. எப்புண்ய பாவங்களால் சுக துக்கத்தைக் கொடுக்கும் இவ் வர்த்தமான சரீரம் ஆரப்பிக்கப்பட்டது? அப்புண்ணிய பாவங்களினது நாசமானது போகத்தானே உண்டாம்.

சம்சாரமானது காமிய நிஷித்த கர்ம பலமாகலின், அக் காமிய நிஷித்த கர்ம நிராசத்தானேயே சர்வ அநர்த்த நிராசமும் சித்தித்தலின், நித்திய அநுஷ்டானத்தால் பிரயோசனம் என்னை யெனின், அற்றன்று. நித்திய கர்மஞ் செய்யாமையாலும், அநர்த்தம் வருமாகலின்.—

13. இப்புருஷனை நித்திய கர்ம அநுஷ்டானத்தாலும், பிரத்திய வாயம் ஸ்பரிசிப்ப தின்று. இக்காரணத்தால் ஆத்ம ஞானத்தை ஆதரியாது கர்மங்களை நன்கு ஆசிரயிக்குக.

(ஞானத்தை) அங்கீகரித்து இங்ஙனங் கூறப்படுகின்றது. உண்மையா யுள்ள ஆத்ம வஸ்து விஷய ஞானமோ இன்று; அதனைப் பிரதிபாதிக்கும் பிரமாண மின்மையால்.—

14. ஈண்டு ஸ்மிருதிகளுடன் எவ்வளவு சுருதிகளிருக்கின்றனவோ அவை யாவும் பெரும் பிரயத்தனத்தால் கர்மத்தையே விதிக்கின்றன. ஆகலின், மோட்சத்தைக் குறித்துப் பெரிய சாதனம் கர்மமேயாகும்.



அற்றேல், பிரமாண மின்மை உனது அபராதத்தானெனின், அற்றன்று. எதனால்.—

15. அதி யத்தனத்தோடு கூடிப் பார்க்கினும், சுருதியின்கண்ணும், ஸ்மிருதியின்கண்ணும், ஞானத்தின் விதியை ஓரிடத்தும் காண்ப தில்லை. எங்கட்கு இவற்றி னின்றும் அந்நியத்தில் விசுவாச மின்று.

அற்றேல், விதி யின்றியும், லோகத்தார் போன்று பிரவிர்த்தி கூடுமெனின், அற்றன்று; எதனால்.—

16. விதி யின்றி எவன் மோகத்தால் பாரலௌகிக கர்மத்தைச் செய்கின்றானோ, அது ‡ பஸ்மத்தின் கண் விடப்பட்ட அவிஸைப் போன்று உபகாரத்தின் பொருட்டாவ தின்றாம்.

பிராமாண்யமாகக் கொண்ட வேதார்த்தத்தை யறிந்த ஜைமினிபகவானது வாக்கியத்தினாலும்.—

17. வேதம் காரியபர மாதலின், இதனி னின்றும் வேறு பிரகாரமானவை அநர்த்தகமேயாம் என வேதத்தை யறிந்த ஜைமினிபகவான் ஸ்வயமே உரத்த சொற்களால் ஆடம்பரத்தோடு கூறுகின்றனர்.

மந்திரவர்ணத்தாலும்.—

18. இவ்வுலகத்தில் நூறுவருடம் ஜீவித்தற்கு இச்சை யிருக்கின், கர்மங்களையே செய்க என்னும் மந்திரமும் சர்வ ஆயுளையும் கர்மத்திலேயே விநியோகஞ் செய்கின்றது.

---

‡ பஸ்மம்=சாம்பல்.

ஞானிகளும் வஸ்துவில் வாக்கியத்தைப் பிராமாண்யமாக அங்கீகரித்தலான், வாக்கியமும் கிரியாபதப் பிரதானமாம்; ஆகவே, இச் சிக்கும் ஞானப்பிராப்தி யின்று.

19. கிரியையைவிட்டுப் பதங்களும் ஒன்றுவதே யில்லை; பத மின்றிய வாக்யத்தைக் கொள்ளுவதே யின்று; எதனுல் ஞானம் விதிக்கப்பட்டதாம்?

ஞானத்தை அங்கீகரிக்கினும் தோஷ மின்று. எதனுல்.—

20. கர்மத்திற்கு அங்காங்கி பாவத்தானும், அல்லது ஸ்வப்பிரதானத் தன்மையானும், ஈண்டுச் சம்பந்தம் சித்தித்தலின், ஞான மிருக்கினும் தோஷ மின்று.

எதனுல் ஞான அங்கிகார அநங்கீகாரத் தின்கண்ணும் ஞானத்தால் முக்தி யின்று.

21. இக்காரணத்தால் சர்வாஸ்ரமத்தினு முள்ள புருஷர்கட்கும் நன்கு அனுஷ்டிக்கப்பட்ட வாக் மன காய கர்மங்களால் சக்திக்குத் தக்க முக்தி யுண்டாகின்றது; அந்நிய சாதனத்தா னன்று.

மித்தியார்த்தப் பிரலாபம் இதுவெனத் தூஷண சம்பாவனத்தின்பொருட்டுக் கூறப் படுகின்றது.—

22. இவ்விதம் தூம சம்பந்த முடைய புத்தியுடையவர்களாயும், (உபதேசாதிகளின்றித்) தமது புத்தியால் தம்மைப் பெரிதாக்கிக்கொள்ளும் மனமுடையர்களாயும், தார புத்திர தனுதிகளின் பரித்தியாகப் பிரயாசமின்றி மோட்ச முண்டா மென்னுந் தீயபுத்தி



உடையவர்களாயு முள்ளவர்களின் வாக்கு யக்ஞசாலையில் நிச்சயமாகச் செல்லுகின்றது.

தூஷண ஆரம்ப அவதியை யறிவுறுத்தற் பொருட்டுக் கூறப்படுகின்றது.—

23. இவ்விடத்துத் தோஷங்களைப் பூர்வபட்ச வாக்கியத்தை நாசஞ் செய்யும் நியாயங்களால் விஸ்தரிக்கப்பட்ட வசனங்களால் சுருக்கமாகக் கிரமமாய்க் கூறுவேன்.

நான்கு விதமான கரும காரியத்திற்கும் முத்தியில் பொருத்த மின்மையின், முத்திக்குக் கர்ம காரியத்தன்மை யின்று.—

24. அஞ்ஞான நாசமாத்ர மாகலின், முத்திக்குக் கர்மம் சாதன மன்று. தமசில் நின்றும் உண்டான சர்ப்பாதிப் பிராந்தியாகிய தமம் போன்று அஞ்ஞானத்தைக் கர்மமானது நிவர்த்தி செய்யாது.

கர்ம காரியத்தன்மையை அங்கீகரிக்கினும் தோஷமே.—

25. ஒரே கர்மத்தால் முத்தி யுண்டாகின்றதா? அல்லது எல்லாக் கர்மங்களானு முண்டாகின்றதா? ஒவ்வொரு கர்மத்தா லெனின், அந்நிய கர்மங்கள் வியர்த்தங்களே. சர்வ கர்மத்தாலும், ஒரு கர்மத் தன்மையே பிராப்த மாகும்.

சர்வப் பிரகாரத்தாலும் கர்மத்திற்கு உத்பத்தியானே விசிஷ்ட சாத்திய சம்பந்தமாகலின், பாரிசேஷ்ய சித்தி யின்று.—

26. பாப நாசத்தின் பொருட்டாகலின், நித்திய கர்மம் முத்தியின்பொருட் டன்று. ஸ்வர்க்காதி பல சம்பந்தமாகலின், காமிய கர்மமும் அங்ஙனமே முத்தி யின்பொருட் டன்று.

பிரமாண மின்மை யானும்.—

27. பார லௌகிகத்தின் இச் சாத்திய சாதனத் தன்மை வசனத்தா லுண்டாகின்றது. சுருதியாகிய வக்தாவி னிடத்தினின்றும் ஓரிடத்தும் மோட்சத்தை கொடுக்கும் கர்மமானது கேட்கப்படவே யில்லை.

அங்கீகரித்ததையே அங்கீகரித்தலானும் * ஶ்வஶ்ரு நிர்க்கச்ச என்னும் வசனம் போன்று உனக்கு நிஷ்பிரயோசனப் பிரலாப மாம்.—

28. நிஷித்த காமியகர்மங்களின் தியாகமானது உமக்கும் இஷ்டமே; அது போன்று எமக்கும் இஷ்டமே. நித்திய கர்மத்திற்குப் பல மின்மையானும், மோட்சத்திற்குக் கர்மம் சாதன மன்றும்.

இங்ஙனம் "கிரியைகளால் மோட்சம் சித்தித்தலின்" என்னு மிதனால் பூர்வமே இப் பட்சம் நிராசஞ் செய்யப்பட்டது. இப்பொழுது சர்வ கர்மப் பிரவிர்த்தி ஹேது நிரூபணத்தால், உண்மையாய ஆத்ம வஸ்து விஷய கேவல ஞான மாத்திரத்தானே சகல சம்சார அநர்த்த நிவிர்த்தி என்னு மிப் பட்சத்தைத் திடஞ் செய்யு மிச்சையுடைய வர் கூறுகின்றனர்.

* ஶ்வஶ்ரு-மைத்துனன். நிர்க்கச்ச-போ.



"எங்ஙனம் நிஷித்த கர்மங்களிலும், யதேச்சா கர்மங்களிலும் ஸ்வாபாவிக தனது அபிப்பிராயத்தா லுற்பன்னமாய நிமித்த வசத்தானேயே இது ஹிதம், இது அஹிதம் என மானிச்சிக்கும் ஜலத்தைப் பானம் பண்ணுபவன் போன்று கற்பித்து லௌகிகப் பிரமாணத்தாற் சித்தித்த சாதனங்களையே கிரகித்து இஷ்டப் பிராப்தியின் பொருட்டும், அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டும் சுவயமே பிரவிர்த்தியும், நிவிர்த்தியு முண்டாகின்றனவோ, அங்ஙனமேயா? அதிர்ஷ்டார்த்த மாகிய காம்ய கர்மங்களிலும், நித்திய கர்மங்களிலும்? அல்லது, அவ்விடத்துப் பிரவிர்த்தி நிவிர்த்திகட்கு நிமித்தம் அந்நியமேயா?" என்று இவ்விடத்து இது பரீட்சிக்கப்படுகின்றது. இதனால் யாது பிரயோசன மெனின், இங்ஙன மாசங்கை நிகழின் கேட்பாயாக. எப்பொழுது உண்மையாய வஸ்துவின் சம்யக் ஞானப் பிரமாண ரூபம் ஆகம சம்பந்தம், அல்லது லௌகிக சம்பந்தம் பிரவிர்த்திக்கு நிமித்த மென்று நிச்சய முண்டாகின்றது, நிவிர்த்தி சாஸ்திரமும் அங்கீகரிக் கப்படுவ தின்று, அப்பொழுது கர்மத்தியாகிகள் நாசமாயினர்; பிராந்தி ஞான மாத்திரத்தைக் கொண்டிருத்தலானும், அலௌகிகப் பிரமாணத்தாற் கிரகித்த கர்மானுஷ்டானத் தியாகியாகலானும். எப்பொழுது மானிச்சிக்கும் ஜலத்தைப் பானம் பண்ணும் இச்சை யுடையவனது பிரவிர்த்திபோன்று மித்தியாவஸ்து பிராந்தி ஞானமே சர்வ ப்ரவிர்த்திகட்கும் நிமித்தமாம், அப்பொழுது நாங்கள் விர்த்தியாகின்றோம், நீங்கள் நாசமாகின்றீர்கள்.—

29. மோகத்தால் ஹிதத்தை யடையவும், அஹிதத்தை விடவும் இச்சிக்கும் புருஷர்கட்கு அடைதற்

கும் நிவிர்த்தித்தற்குமுரிய உபாயங்களைச் சாஸ்திரம் சூரியன் போன்று பிரகாசிப்பிக்கின்றது.

இங்ஙனம் பிரத்தியட்ச, அநுமான, ஆகாமப் பிரமாணங்களைக் கொள்ளுதலினலே ஆத்மாவிற்கு நிரதிசய சுகமாகிய ஹிதத்தின் வியதிரேகமின்மையினனும், அஹிதமும் ஆறுவது பிரமாண கோசரம் போன்று ஸ்வபாவமாகவே இச்சிக்கப்பட்டமையானும், இங்ஙனம் ஸ்வபாவமாக ஆத்மாவை யறியாமை மாத்திரத்தானே ஹிதம் எனக்குண்டாகுக, அஹிதம் எனக்கு உண்டாகாதிருக்குக என்னும் மித்தியா ஞானமோ ஊஷர சுத்திகைகளின் அறியாமையா லுற்பன்னமான மித்தியா ஞானம் போலப் பிரவிர்த்தி நிமித்தமாம் என்று நிச்சயமாகின்றது.

சாஸ்திரமும் பதார்த்தத்தின் சக்தியை ஸ்தாபிப்ப தின்று என்னுமிதுவே மேலும் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றது.—

30. அடைய வேண்டும், விட வேண்டு மென்னு மிச்சைகளைப் புருஷனுக்குச் சாஸ்திரம் தன்னிடத்தே செய்வ தின்று ; எதனல்? பசுவாதிகளிடத்தும் அது பார்க்கப்படுதலின்.

உண்மையாய வஸ்துவை யறியாமையே விதிப் பிரதிஷேத சாஸ்திரங்களிற் பிரவிர்த்திக்கின்ற தென்று கூறப்பட்டது. இப்பொழுது விஷய ஸ்வபாவ அநுரோதத்தால் பிரவிர்த்தி பொருந்காதென்று கூறு மிச்சை யுடையவர் புகல்கின்றார்.—



31 - 32. அஞ்ஞானத்தால் அடைந்ததை யடைய இச்சை யுண்டாகின்றது ; கண்டத்தி லுள்ள ஆபரணம் போன்று. ஸ்வபம் விடப்பட்டதைப் பிராந்தியால் தனது சாயையினிடத்து ராக்ஷசத்தன்மை போன்று, பயத்தால் மோகத்தோடு கூடித் தன்னை யிரட்சிக்க வேண்டுமென்னு மிச்சை யுடையவன், விட இச்சிக்கின்றான். எவ் வஸ்துக்களாய; சோர வியாக்ராதிகள் விடப்பட வில்லையோ, எந்தத் தனுதிகள் அடையப்பட வில்லையோ அவற்றையும் இச்சிக்கின்றான்.

இந் நான்கு விஷயங்களில் பிராப்தத்தின் பொருட்டும், பரிகாரத்தின் பொருட்டும் பகுக்கும் நியாயம் காட்டப்படுகின்றது.—

33. அடையத் தக்கதிலும், நிவிர்த்திக்கத் தக்கதிலும் சுருதியால் வேறாக உபாயங்களை யறிந்து அநந்தரம் அடையத்தக்க சுவர்க்காதிகளை அடைகின்றான். அங்ஙனமே நிவிர்த்திக்கத்தக்க நரகாதிகளையும் விடுகின்றான்.

† எஞ்சியவற்றிற்குச் ஸ்வபாவத்தானேயாம்.—

34. விடவேண்டும், அடைய வேண்டு மென்னும் ஞானத்தால் ஹானப் பிராப்திக ளுண்டாகின்றன; கருமத்தால் அன்று. மோகமாத்திர மறைப்பாகலின், அவை கிரியையாற் சித்திப்பன வல.

---

† நிவிர்த்திக்க வேண்டு மென்னு மிச்சையும், அடைய வேண்டு மென்னு மிச்சையும்.

எக்காரணத்தால் மீண்டும் ஆத்ம வஸ்துவின் யதார்த்த ஞானமாத்திரத்தானே இச்சிக்கும் நிரதிசய சுகப் பிராப்தியும், சர்வ துக்க நிவர்த்தியும் உண்டாகின்றன? கருமத்தா னுண்டாவ தில்லை யெனின், கூறப்படுகின்றது.—

35. கருமமானது அஞ்ஞானத்தி னின்றும் உண்டாயிருக்கின்றமையின், அதற்கு மோகத்தை நிவிர்த்தித்தற்குச் சாமர்த்தியமே யின்றாம். இதற்கு விரோதி சம்யக்ஞானமாம்; இருட்குச் சூரியன் போன்று.

அற்றேல், ஆத்ம ஞானமும் அவித்தையை உபாதானமாக உடையது; சாஸ்திர சிஷ்ய ஆசாரியாதியின் கிரகண மின்றி ஆத்ம ஞானம் ஆத்மாவையடைவதின்று; இது தோஷ மன்று. எதனால் ஆத்ம ஞானம் ஸ்வதசித்த பரமார்த்த ஆத்ம வஸ்து சொரூபமாத்திர ஆஸ்ரயத்தானே அவித்தையையும், அதனி னின்றுமுண்டாய காரக சமூகத்தையும் பிரத்துவம்சஞ் செய்யும் தனது சொரூப உத்பத்தியின்கண்ணேயே சாஸ்திராதிகள் அபேட்சிக்கப்படுகின்றன; உத்பத்தியாகிய அவித்தையின் நிவிர்த்தியில் அபேட்சிப்பதே யின்று. கர்மமோ தனதுற்பத்தியினும், உற்பத்தி யனந்தரத்தினும் அபேக்ஷிக்கின்றது. காரகத்தை ஸ்பரிசிக்காத கிரியையானது கல்பகோடிகளால் வியவகிதமா யிருக்கும் பலத்தைக் கொடுத்தற்பொருட்டுத் தன் சொரூபத்தை இரட்சிப்ப தின்று; அஃது இனிச்சாதிக்கப்படுவது மாத்திரமான சொரூப மாகலின். கிரியையும் ஆத்ம ஞானம் போன்று தனது சொரூப பிரதிலம்ப காலத்தின் கண்ணேயே சுவர்க்காதி பலத்தோடு கர்த்தாவைச் சம்பந்திப்பிப்ப தின்று. ஆத்ம ஞானமோ, புருஷார்த்த



சித்தியின்கண் உத்பத்தியான சொரூபத்தா னன்றி வேறு ரூபத்தை, அல்லது வேறு சாதனத்தைமீண்டும் அபேட்சிப்பதே யின்று.

எக்காரணத்தா லிங்ஙன மெனின், எதனால்.—

36. பலத்தோடு கூடிய பிரமாணத்தினின்றுமுண்டாய சம்யக் ஞான மானது பாதிக்கப்படுவதின்று. அந்நிய சாதனமும், பாதிப்பதைக் குறித்து இச்சிக்கப்படுவ தில்லை.

தன் பட்சத்தைக் காரணத்தோடு ஸ்தாபித்திருத்தலின் நிர்ப்பயமாய் உபசாரஞ் செய்யப்படுகின்றது.—

37. ஆகலின், துக்கமாகிய சமுத்திரத்திற்குக் காரணமாகிய அஞ்ஞான நிவிர்த்தியின் பொருட்டு சம்யக் ஞானம் நன்கு பிராப்தமாம். கிரியை யெனின், புகன்ற ஹேதுக்காளல் பொருத்த மன்று.

அற்றேல், பலத்தோடு கூடிய சம்யக் ஞானமும் அப்பிரமாணத்தி னின்று முண்டான அசம்யக் ஞானத்தால் பாதிக்கப்படுந் தன்மையைப் பார்க்கின்றோம். எதனால், பரமார்த்த ஞான முண்டான புருஷனுக்கும் கர்த்ருத்தன்மை போக்திருத்தன்மை ராகத்துவேஷாதி அஞ்ஞானத்தி னின்று முண்டான ஞானங்கள் ஆவிர்ப்பவிக்கின்றன. சம்யக் ஞானம் பாதிக்கப்படா திருக்கின், அதன் விருத்தமான ஞானத்தினது சம்பவமின்று. இஃதிங்ஙன மன்று; எதனால்.—

38. அவித்தை பாத மடைந்தமையின், வித்தையை அது பாதிப்ப தின்றாம். அதன் வாசனை வித்தியா

ஸ்மிருதியின் நிமித்தத் தன்மையை நிச்சயமாக அடைகின்றது.

"கருமமானது அஞ்ஞானத்தி னின்றும் உண்டா யிருக்கின்றமையின்" எனக் காரணம் கூறப்பட்டது. அதன் சமர்த்தனமும் பூர்வமே "மோகத்தால் ஹிதத்தை யடையவும்" என்பதாதியால் கூறப்பட்டது. அதனைக் கொள்ளுதற் பொருட்டு அவித்தையின் அந்வயத்தாலும், சம்சார அந்வயத் தன்மையைக் காண்பிப்பே னென்னு மிதனுற் கூறப்படுகின்றது.—

39. பிராஹ்மணாதி ரூப சரீரத்தில் புருஷன் ஆத்மாவென்னும் பாவனையை யடைந்து, வாங், மன, காய, கர்மங்களால் சுருதியின் கிங்கரத் தன்மையை யடைகின்றனன்.

எதனுல் கர்மம் அஞ்ஞானத்தி னின்றுமுண்டானதேயாம், அதனுல் அதன் நிவிர்த்தியில் நிவிர்த்தியாகின்றது—எனக் கூறப்படுகின்றது.—

40. பிரஹ்மக் ஞான அக்கியால் முனி சர்வ அதிகாரத்தையும் தகிப்பனே யாயின், சுருதியின் சிரசிலிருந்து கொண்டு வேதத்தின் கிங்கரனுவதே யின்றும்.

கனதர அவித்தையா படலத்தோடுகூடிய அந்தக் கரணத்தையும், அங்கீகரித்த கர்த்திருத்துவாதி சர்வ அதிகார காரணத்தையும், விதி ப்ரதிஷேத சோதனையாகிய சந்தம்சங்களால் பிடிக்குந் தன்மையையுமுடைய கர்மத்திற் பிரவர்த்திக்கும் இதரன்.—



41. சுபகர்மங்களால் தேவத்தன்மையை அடைகின்ருன்; நிஷித்த கர்மங்களால் நரகத்தை அடைகின்ருன்; புண்ணிய பாபகர்மங்களால் பரதந்திரனுய் மனுஷத்தன்மையை அடைகின்ருன்.

பிரஹ்மாமுதற் றம்ப பரியந்தம் கோரமான துக்க சமுத்திரத்தில், கடீ யந்திரம் போன்று, ஏறுதல் இறங்குதல் நியாயத்தால், அதம, மத்திம, உத்தம, சுக, துக்க, மோஹ, † வித்தியுத் சபல சம்பந்தத்தைக் கொடுக்கும் விசித்திர யோனிகளில், மத்தியானத்தில் நாநா திக்கிலிருந்து வந்திருக்கின்ற ஆகுல வாயுவேகத்தால் அசைக்கப்பட்ட சமுத்திர மத்தியி லிருக்கும், காய்ந்த சுரைக்குடுக்கை போன்று, சுபகர்மம், அசுபகர்மம், சுபாசுபகர்மமாகிய வாயுவாற் பிரேரிப்பிக்கப்பட்டு.—

42. இங்ஙனம் சங்கிரமணத்தை யடைந்த இப் புருஷன், அவித்தியா காம கர்மங்களால் பந்தப்பட்டுக் காமியாய் ஜனிக்கின்ருன்; சுக மின்றியவனுய் மரிக்கிருன்.

உரைத்த அர்த்தத்தில் ஆதரவை யறிவுறுத்தற்பொருட்டுப் பிரமாண முரைக்கப்படுகின்றது.—

43. எக்காரணத்தால் காமமூலம் சம்சாரம் (அதனுல்) காமத்தின் விசேஷநிவிர்த்தியின்பொருட்டுச் சுருதியும் இவ்வர்த்தத்தைக் கூறுகின்றது. அதன் (காமத்தின்) நாசம் அஞ்ஞான நிவிருத்தியாலாம்.

† வித்யுத்-மின்னல்; சபல-போன்ற.

இச்சுருதி எஃதெனின்.—

44. "எப்பொழு தெல்லாம் விடுபடுகின்றன" என்றும், "என்று நு" என்றும், பிருஹதாரண்ய உப நிஷத் கூறுகின்றது; "இது காமபந்தனமே" என்று வியாஸபகவானும் ஒவ்வொரு பதத்திலும் கூறுகின் றூர்.

இவ்விதம் சம்சாரமார்க்கம் வியாக்கியா னஞ்செய்யப்பட்டது. இப்பொழுது அதன் வியாவிருத்தியின்பொருட்டுக் கர்மங்கள் † ஆரா துபகாரகத்தன்மையால் எங்ஙனம் மோக்ஷகாரணத்தன்மை அடையப்படுகின் றன, அங்ஙனமே கூறப்படுகின்றது.—

45. இங்ஙனம் துக்கத்தால் தபிக்கப்பட்டு நித் திய கர்ம அநுஷ்டானத்தால் சுத்த புத்தியையுடைய அவனுக்குச் சில புண்ணிய விசேஷத்தால் இருதயத் தில் வைராக்கியம் உண்டாகின்றது.

எவ்வித வைராக்கியம் உண்டாகின்ற தெனின், கூறப்படுகின்றது.—

46. இவனுக்கு நரகத்தில் நின்றும் பயம் எங்ங னம் உண்டாயிற்றே? அங்ஙனமே காமிய பலத்தினின் றும்; யதார்த்தத்தைப் பார்த்தலான். அதனல் நித்திய கர்மத்தைச் செய்ய இச்சிக்கின்றுன்.

இங்ஙனம் நித்திய நைமித்திக கர்ம அநு ஷ்டானத்தால்.—

47. ஈஸ்வரார்பித கர்மங்களால் சுத்த மடைந்த அச்சித்தத்தில் பிரஹ்மலோகாதிகளில் நிர்மலமான வைராக்கியம் உண்டாகின்றது.

† ஆராத்-சேய்மை.



எதனல் ரஜோகுண தமோகுணமாய மல ங்களோடு கூடிய சித்தமே காமமாய படிசனுல்(தூண்டில்போடுபவனுல்) இழுக்கப் பட்டு விஷயமாகிய துரந்தர வத ஸ்தா னங்களில் வைக்கப்படுகின்றது, அதனல் நித்திய நைமித்திக கர்ம அநுஷ்டான பரி மார்ச்சனத்தால் ரஜோகுண தமோகுண மல மின்றியும், பிரசன்னமாயும், சலனமின்றி யும், துலக்கப்பட்ட ஸ்படிகக்கல் போன்ற தாயும், பாஹ்யவிஷய காரணத்தாலும் ராகத் துவேஷரூப அதிக்கிரஹ படிசனுல் இழுக் கப்படாமலும், சர்வ கல்மஷ மின்றியும், பிரத் தியக்மாத்திர பிரவணத்தன்மையு முள்ள சித்த தர்ப்பணம் இருக்கின்றது. இதனல் இது கூறப்படுகின்றது.—

48. எப்பொழுது சர்வ காமங்களி னின்றும் புத்தி வெளிச்சென்றிருக்கின்றது, அப்பொழுதே ஸ்வய மே பிரத்தியக் ஆத்மாவை சாக்ஷாத்தாக அறிய இச் சிக்கின்றுன்.

இதன்பின் முடிவான அதிகாரத்தை யுடைய கர்மங்கள் பியத்தியக்பிரவண ஞனு வில் செய்யப்பட்ட சம்பத்துக்கள், சரிதார்த் தங்க ளிருக்கின்றன.—

49. சுத்தமான பிரத்தியக் பிரவணத்தன்மை யைப் புத்திக்குக் கர்மங்கள் உத்பத்தி செய்து கிரு தார்த்தமாய் நாசத்தை அடைகின்றன; இருள் போன்று லயத்தை யடைகின்றன.

எதனால் நித்திய கர்ம அநுஷ்டானத்திற்கு இம்மஹிமை.—

50. அதனால், ஆத்ம ஞானத்தை இச்சிக்கும் முமுக்ஷுக்களால் ஆத்ம சுத்தியின்பொருட்டு சதா நித்திய நைமித்திக கர்மம் செய்யத்தக்கன.

உரைத்த பொருளில் சர்வஞ்ஞ வசநம் பிரமாணம்.—

51. யோகத்தில் ஆரூடத்தன்மை அடைய வேண்டுமென்னு மிச்சை யுடைய முனிக்குக் கர்மம் காரணம் எனவும், யோகாரூடனுய அவனுக்கே † சமம் காரணம் எனவும் ஸ்மிருதி கூறுகின்றது.

நித்திய கர்ம அநுஷ்டானத்தால் தர்மம் உண்டாகின்றது, தர்ம உத்பத்தியால் பாபம் நசிக்கின்றது, அதனால் சித்தசுத்தி, அதனால் சம்சாரத்தின் யதார்த்தஞானம், அதனால் வைராக்கியம், அதனால் முமுக்ஷுத் தன்மை, அதனால் அவ்வுபாயந்தேடுதல், அதனால் சர்வகாம அதன் சாதந சந்நியாசம், அதனால் யோகாப்பியாசம், அதனால் சித்தத்திற்குப் பிரத்தியக்குப் ‡ பிரவணத்தன்மை, அதனால் தத்துவமசியாதி வாக்கியார்த்த பரிஞானம், அதனால் அவித்தியா நிவர்த்தி, அதனால் தன தாத்மாவின்கண்ணே நிலைத்தல், "பிரஹ்மமாகவே யிருந்து பிரஹ்மத்தை யடைகின்றான், விடுபட்டவன் விடுபடுகின்றான்" என.—

† சமம் - சன்னியாசம். ‡ பிரவணத்தன்மை-ஏகவிருத்தி.



52. இங்ஙனம் பாரம்பர்யத்தால் கர்மம் அவித்தியா நிவர்த்தியின்பொருட் டாகின்றது. ஞாநம் போன்று விரோதி யன்றாகலின், கர்மம் அவித்தையை நிவிர்த்திப்ப தன்று.

முக்தியில் கர்மத்தின் காரியம் அணுவும் பொருத்த மின்று; முக்தியின் கண்ணு மன்று; எது பொருந்துகின்றது அக்கர்மம் அபேக்ஷிக்கப்படுகின்றது. அது கூறப்படுகின்றது.—

53. உத்பாத்தியமும் ஆப்யமும் சம்ஸ்கார்யமும் விகார்யமும் கிரியையின் பலம். எதனால் இங்ஙனம் முக்தி யன்று, அதனால் கர்மம் அதற்குச் சாதன மன்று.

இங்ஙனம் கேவலம் கர்மம் சாக்ஷாத் அவித்தியா நிவிர்த்தியின்பொருட்டுச் சமர்த்த மன்றென விஸ்தரித்தோம். முக்தியின்கண்ணும், முமுக்ஷு ஞானம் அதன் விஷய ஸ்வபாவ மிவற்றின் அநுரோதத்தால் சர்வப்பிரகாரத்தும் கர்மங்கட்குப் பொருத்த மின்மை "ஹிதத்தை யடைய இச்சிக்கும்" என்பதாதியால் கூறப்பட்டது. எவ்விதம் ஆரா துபகாரகத்தால் ஞாந உத்பத்தியில் கர்மங்கட்குச் சமுச்சயம் பொருந்துகின்றது, அங்ஙனம் கூறப்பட்டது. அவித்தையின் நாசத்தின்கண்ணே அடைந்த ஆத்ம ஸ்வாப ஆத்ம ஞாநத்திற்கே அசாதாரண சாதக தமத்தன்மை, பிரதானரூப, அல்லது குணரூப அந்நியத்திற் கன் றென்னும் இஃது இப்பொழுது புகலப்படுகின்றது.

அவற்றுள், ஞாநம் குணரூபம் காரண மன்று என்னு மிது கூறப்படுகின்றது.—

54. (கர்மத்தின் அங்கத்தன்மையால்) ஞாநம் கர்மத்தை அடைந்து அஞ்ஞானத்தை நிவிர்த்திப்ப தன்று; சாத்திய சாதநபாவத்தால், ஏக கால ஸ்திதி யின்மையின்.

சமப் பிரதானங்கட்கு மசம்பவமே:—

55. பாத்திய பாதகபாவத்தானும் பஞ்சாஸ்யம் (சிம்ஹம்) உரணம் (எருமை) போன்று. ஏக ஆசிரய ஸ்திதி யின்மையின், அவ்விரண்டற்கும் சமுச்சயத்தன் மை யின்று.

எதனுல் பாத்திய பாதகபாவம். எக்கார ணத்தால்.—

56. அபாரமார்த்திக வஸ்து; கர்மமாகிய அவி த்தையாகின்றது; அதன் விரோதி பாரமார்த்திக வஸ்து; வித்தையாகின்றது. அவ்விரண்டற்கும் இங்ஙனம் சமுச்சயம்; சூரியனும் இருளும் போன்று.

அதனுல் அகாரகப் பிரஹ்மாத்மாவின் கண் பரிசமாப்த ஞாநத்தின் சர்வ கர்ம விதி, விதிக்கப்படுஞ் ஸ்வபாவத்தினின்றும் எங்ஙனம் † குண்டிக்கப்பட்டது, அது கூறப் படுகின்றது.—

57. பிருஹஸ்பதிசவ (யாக)த்தின்கண் எங்ங னம் க்ஷத்திரியன் பிரவிருத்திப்ப தின்று; அல்லது, பிராஹ்மணத்துவாதி நான் என்னும் அபிமானியாய விப்பிரன் க்ஷத்திரிய சம்பந்த கர்மத்தின்கண் (பிரவிர்த் திப்ப தின்று.)

எங்ஙனம் இத்திருஷ்டாந்தம், இங்ஙன மே தார்ஷ்டாந்திகமு மெனக் கூறப்படுகின் றது.—

† குண்டித்தல்-மழுங்கல்.



58. விதேஹனும் சந்தேஹக மின்றியவனும் "இதன்று இதன்று" என எஞ்சுதலின், தேஹாதிகளை அனுத்மாவாக அறிபவன். அதுபோன்று அந்தக் கிரி யைகளையும் பார்ப்பதே யின்று.

அவ்வர்த்தத்தின் † ஆவிஷ்காரணத்தின் பொருட்டு உதாஹரணம்.—

59. நல்ல மண்ணுற் செய்யப்பட்ட களபத்தில் பாலியர்கள் எங்ஙனம் யானைத்தன்மையை அத்தியா சஞ் செய்து ஓடுகின்றுர்கள், அங்ஙனமே மூடன் தேஹாதிகளை ஆத்மாவினிடத்தில் அத்தியாசஞ் செ ய்து சேஷ்டிக்கின்றுன்.

நாங்கள் ஞாந கர்ம மிரண்டற்கும் சர்வ விடத்தும் சமுச்சயமே கூறுவ தின்று; எவ் விடத்து ஞாந கர்மங்கட்குப் பிரயோஜ்யப் பிரயோஜக பாவம், அவ்விடத்து நமது பிதா வானும் நிவிர்த்தித்தற்குச் சக்தி யின்று. அவ்விடத்து விபாகத்தைத் தெரிவித்தற் பொருட்டு உதாஹரணம் காண்பிக்கப் படுகின்றது.—

60. பயந்தவன் ஸ்தாணுவைச் சோர னென்னும் புத்தியாற் கிரகித்து எங்ஙனம் ஓடுகின்றுனே, அங் ஙனமே பிராந்தன் ஆத்மாவைப் புத்தியாதிகளால் ஆரோபித்துச் சேஷ்டிக்கின்றுன்.

இங்ஙனம் எவ்வெவ்விடத்து ஞாந கர்மங் கட்குப் பிரயோஜ்யப் பிரயோஜக பாவம் இருக்கின்றது, அவ்வச் சர்வ விடத்தும் இந்த நியாயமேயாம். எவ்விடத்துச் சமகால

† ஆவிஷ்கரணம்-ஸ்பஷ்டம்.

மன்று; கிரமமாகச் சமுச்சயமும் பொரு
த்த மன்று அவ்விஷயங் கூறப்படுகின்
றது.—

61. எங்ஙனம் ஸ்தாணுவின் தத்துவஞானம் ஓடுவதின்கண் அங்க மன்று, அதுபோன்று ஆத்மாவின் தத்துவஞாநம் கிரியா விதியின்கண் அங்க மன்று.

எதனல் குணத்திற் கிச்சுபாவம்.—

62. எது எதனது அநுரோதத்தால் ஸ்வபாவத்தை அநுவர்த்திக்கின்றது, அது அதன் குணரூபமாகின்றது. எக்காரணத்தால், பிரதானமாகலின், குணமன்று.

எக்காரணத்தால்.—

63. கர்மப் பிரகரணத்தை ஆகாங்க்ஷை செய்யும் ஞாநம் கர்மத்தின் குண மாகின்றது. எப்பிரகரணத்தின்கண் எதற்கு (ஆகாங்க்ஷையிருக்கின்றது) அஃது அதன் அங்க மென்று கூறப்படுகின்றது.

64. எது ஸ்வரூப லாப மாத்திரத்தால் நமது அவித்தையை நாசஞ் செய்கின்றதோ, அந்த ஞானம் ஓரிடத்தும் கர்மத்திற்கு அங்கமாவது மன்று; அல்லது, பிரதானமாவது மன்று.

சமுச்சயபக்ஷ வாதியானும் அவசியமே
அஃதங்கீகரிக்கப்படவேண்டும். எதனல்.—

65. அஞ்ஞாநத்தை நிராகரிக்காத ஞாநமே சித்திப்ப தின்று. காரக சமூக மின்றிய ஞாநத்தைக் கர்மம் ஸ்பரிசிப்ப தின்று.



ஞாந கர்மங்களினது சமுச்சய நிவிர்த்
திக்கு இதுவும் வேறு காரணம் —

66. எது ஸ்வரூப காரியங்கள், பிரகாச தமசு போன்று விரோதிகளே. ஆதலின், ஞாந கர்மங்களின் சாங்கத்திய மின்று.

இங்ஙனம் உபசம்ஹாரஞ் செய்யுமிடத்துச் சிலர் தமது சம்பிரதாய பலத்தைக்கொண்டு, எவ்விவ் வேதாந்த வாக்கியத்தால் நான் பிரஹ்மம் என்று விஞ்ஞாநம் நன்குண்டாகின்றது, அது தன துத்பத்தி மாத்திரத்தால் அஞ்ஞாநத்தை நிவிர்த்திப்பதே யின்று; பின்னையோ, நாடோறும் சீக்கிரம் தீர்க்க காலத்தால் உபாசனை செய்யும் புருஷனுக்குப் பாவனை மிகுதியால் சேஷ மின்றி அஞ்ஞாநம் நீங்குகின்றது; "தேவனுகித் தேவர்களை அடைகின்றான்" என்னுஞ் சுருதியால் என்று கூறுகின்றனர். அந்நியர்கள், வேதாந்த வாக்கியத்தா னுண்டாய நான் பிரஹ்மம் என்னும் ஞாநம் சம்சர்க்கரூப மாகலின், ஆத்ம வஸ்துவின் யதார்த்தத்தன்மையைக் கிரகிப்பதே யின்று; பின்னையோ, இதுவே கங்காப்பிரவாஹகம் போன்று சதா அப்பியாசிக்கப்பட்ட புருஷனுக்கு அந்நியமே வாக்கியார்த்தரூப வேறு விஞ்ஞாந முண்டாகின்றது. அதுவே, சேஷ மின்றி அஞ்ஞாந திமிரத்தை நிவிர்த்திக்கின்றது; "அறிந்து பிரக்ஞையைச் செய்க" என்னுஞ் சுருதியான், என்று கூறுகின்றனர். இவ் விருபக்ஷங்களின் நிவிர்த்தி யின்பொருட்டு இஃது அறையப்படுகின்றது.—

67. கிரியா காரக ரூபத்தைத் தரிக்கும் அஞ்ஞாநத்தை வேதாந்த வாக்கிய ஜந்நிய ஞாநம் ஒருதரம்

பிரவிருத்திப்பதால் நாசஞ் செய்கின்றது. அதனல் இவ்விரண்டற்கும் சமுச்சய மின்று.

இங்ஙனம் நாநாத்தன்மை யின்றிய பிரஹ்மத்தினிடத்து ஞாந கர்மங்களின் சமுச்சயம் நிராகரிக்கப்பட்டது. இப்பொழுது வேறு பக்ஷ மங்கீகரிக்கினும், வாதிக்குச் சங்கை உண்டாயின், பூர்வம்போன்றுஎங்ஙனம் விசுவாசு மின்று; அங்ஙனம் புகலப்படுகின்றது.—

68. நாநாத்தன்மை யின்றிய பிரஹ்மம் எந்த வாதிகட்கு அங்கீகாரமோ, அவர்கள் மதத்தானும் ஞாந கர்மங்கட்குச் சமுச்சயம் சாத்திய மன்றும்.

அதனது விகற்ப வசநம் தூஷண விபாக ஞாபகத்தின்பொருட்டுச் செய்யப்படுகின்றது.—

69. பிரஹ்மம் அவனது ஆத்மரூப மாகின்றதா? அல்லது அநாத்மரூப மாகின்றதா? ஆத்மரூபமாயின் அடைவின்மை மோஹத்தா னுண்டாம்; அநாத்மரூப மாயினும் அடைவின்மையேயாம்.

அவற்றுள், எப்பொழுது உண்மை விருத்தாந்தத்தானே பிரஹ்மம் அடையப்படின், ஆத்மஸ்வபாவமாகலின், கேவலம் அசுர சம்பந்தி மோஹத்தின் மறைப்பு மாத்திரமே அடைவின்மைக்கு நிமித்தமாம். அப்பக்ஷத்தில்.—

70. மோஹமாய மறைப்பின் நிவிர்த்திக்குக் கர்மங்கள் காரணமேயன்றும். ஞாநத்தானே பலப்பிராப்தியாகலின்; அவ்விடத்துக் கர்மம் வியர்த்தமே.



ஆத்மரூப மல்லாத பிரஹ்மத்தின்கண்ணே கர்மம் சாதநபாவத்தை யடைவ தின்று. அல்லது கர்ம சமுச்சித ஞானமும், அசமுச்சித ஞாநமும் சாதநமன்று.எதனல் அந்நியத்தன்மைசாதகனுக்கு ஸ்வயமே சித்தம்; (அதுபோல) பிரஹ்மத்திற்கும் அந்நியத்தன்மை ஸ்வயமே சித்தமாம். அவ்விடத்து இங்ஙனம்.—

71. அந்நியனுக்கு அந்நிய ஆத்துமத்தன்மை யடைவில் ஓரிடத்தும் ஹேதுவின் பொருத்த மின்று. அஃதிருக்கினும், ஹானி யின்று; பரமாத்வை யடைகின்றான்.

மூன்றாவது பக்ஷத்தின்கண்ணே விதியாம்.—

72. பரமாத்மாநுகூல ஞாந அப்பியாசத்தால் துக்கியாகிய த்வைதிகளும் விடுபடுகின்றனர்; பரமாத்ம விரோதி ஞானத்தான் அன்று.

மற்றைப் பக்ஷத்தின்கண்ணே, விதிக்கே அவகாசத்தன்மை யின்று. எங்ஙனம்.—

73. சமஸ்த வியஸ்தரூபமாயும், பிரஹ்மத்தின் கண்ணே யிருந்து சர்வத்தையும் அந்நிய மன்றென்று பார்க்கும் புருஷனுக்குக் கர்மத்தின்கண் ஹேது யாது? கூறுக.

சர்வ கர்ம நிமித்த சம்பவ அசம்பவங்களால் சர்வ கர்ம சங்கரமும் வரும். எதனால்.—

74. இப்புருஷனுக்குச் சர்வ ஜாதியாதி யுடைமையின்கண் ஸ்வயமே ஹேதுவின் பொருத்த மின்று.

(அதிகாரி) விசேஷத்தைக் கிரகிக்காது கர்மம் பிரவர்த்திப்பதே யின்று.

அத்தியாத்ம அபிமானத்தால் விதி யிருக்குக எனின், இங்ஙன மன்று. எதனால் —

75. அசுர சம்பந்தியாகலின் வித்துவானுக்கு அத்தியாத்ம அபிமானமு மின்று. வித்துவானுக்கும் அசுர சம்பந்தி அத்தியாத்ம அபிமான மிருக்குமாயின், பிரஹ்ம ஞாநம் வியர்த்தமேயாம்.

அஞ்ஞாந காரியமாகலானும் சமகாலமும் பொருத்த மன்று; கிரமமாகவும் பொருத்த மன்று ; ஞாந கர்மங்கட்கு வஸ்து அவஸ்து தந்திரமாகலின் என்று இங்ஙனம் நிராகரிக்கினும், † காசத்தை அல்லது திருணத்தை அவலம்பித்துக் கூறுகின்றார்.—

76. மீண்டும் ஞாநி அத்தியாத்ம அபிமான முடையவ னாகின்றான். (ஆயின்), மூடத்தன்மையை ஆசிரயித்தவனாகின்றான். அவன் கர்மங்களைச் செய்பவ னேயாவன்; அஞ்ஞானே யார் நிவிர்த்திப்பது?

சித்தித் திருத்தலின், சாத்திய மன்று. எதனால்.—

77. சாமாநிய விசேஷரூபங்களாய கர்மம் இந்த யோகியின் ஸ்வரூபமே, நிஸ்வாச உஸ்வாசம்போன்று. ஆகலின், விதியை அபேக்ஷிப்ப தில்லை.

ஆயின், பின்னுபின்ன ரூபமாகப் பிரஹ்ம மிருக்குக; ஆகவே, ஞாந கர்மங்கள் பொருந்துகின்றன; அவ்விரண்டும் பேதாபேத விஷயமாகலின். அவ்விடத்து

† காசம் - இடம்.



இப்பக்ஷமே பொருத்த மின்று. காரணம் என்னே? இது பேதம் என்று அபேத புத்தியை நிராகரிக்காது பேத புத்தி பதார்த்தத்தை விஷயீகரிப்ப தில்லை. இங்ஙனம் அங்கீகரியா தொழியின், பின்னுபின்ன பதார்த்தங்கட்கு அலௌகிகத் தன்மை பிராப்தமாம். நிஷ் பிரமாண முடையதாந்தன்மையும் ஆசிரயிக்க. அதுவும் இருபக்ஷம் அங்கீகரித்தலான் அபேத பக்ஷத்தில் துக்கமுடையது பிரஹ்மம் ஆகும். இதனால் கூறப்படுகின்றது.—

78. (சாமான்ய) விசேஷங்களால் பின்னுபின்ன மாயின், உனது மதத்தில் பிரஹ்மம் நிச்சயமாகத் துக்கமுடைய தாகின்றது. சர்வதுக்கமுடையதாந்தன்மையைக்கொள்ளின், ஆத்மவாதிகளின் புத்தி ஆச்சரியமே யாகின்றது.

ஆகலின், ஞாந கர்மங்கட்குச் சமுச்சய மன்றென நன்கு கூறப்பட்டது. உபசம் ஹாரஞ் செய்யப்படுகின்றது.—

79. எங்ஙனம் சூரியனுக்குத் தமம் அங்கம் (அன்று), அக்நிக்குச் சீதம் அங்கத்தன்மை எங்ஙனம் (அன்று), ஜலத்திற்கு உஷ்ணத்தன்மை எங்ஙனம்(அங்க மன்று), இங்ஙனமே ஞாநத்திற்குக் கிரியாங்கத்தன்மை (இன்று).

புகன்ற உபபத்தி பலத்தானே பூர்வ பக்ஷம் நிராகரித் திருத்தலின், கூறத்தக்க சேஷ மின்று என்னு மிதனால் † பிரதிபத்தி கர்மம் போன்று பூர்வ பக்ஷ பரிஹாரத்தின்

† பிரதிபத்தி கர்மம் — யாகஞ்செய்து எஞ்சிய பதார்த்தங்களை வீண்போக்காது உபயோகிக்குங் கர்மம்.

பொருட்டுச் சிற்சில கூறவேண்டு மென்னு மிதனுல் இது கூறப்படுகின்றது.—

80. 'கிரியைகளால் மோக்ஷஞ் சித்தித்தலின்' என்பதாதி அநேக அநுசிதம் யாது கூறப்பட்டது, அது நியாய மன்ரும். எங்ஙனம் (நியாய மன்று), அது இப்பொழுது கூறப்படுகின்றது.

யாதொரு இந்தக் காமிய கர்மங்கட்கும், நிஷித்த கர்மங்கட்கும் தியாகம் பிரதிஞ்ஞை செய்யப்பட்டது; அப்பிரதிஞ்ஞை அநுஷ்டானஞ் செய்தற்குச் சமர்த்த மன்று. காரணம் என்னை? உத்பத்தியான கர்மத்திற்கு இரண்டு பிரகாரத்தால் நிவிர்த்தி உண்டாகின்றது; ஆரம்பித்த பலத்தையுடைய கர்மத்திற்கு உபபோகத்தானும், ஆரம்பிக்காத பலத்தையுடைய அசுப கர்மத்திற்குப் பிராயச்சித்தத்தானும் என. மூன்ருவது தியாகப்பிரகாரமும் அகர்த்திரு ஆத்மஞானத்தால். அதுவோ, ஆத்மஞாநம் அங்கீகரியாமையின் உம்மால் அங்கீகரிக்கப்படமாட்டாது. அவற்றுள், எவ்வளவு அநுபவிக்கப்படாத பலத்தை யுடையதும், ஆரம்பிக்கப்படாத பலத்தையுடையதுமான கர்மங்களோ, அவை ஈஸ்வரனுலும் ஒருவராலும் பரித்தியாகஞ் செய்தற்குச் சமர்த்த மன்று. ஆரம்பித்த பலத்தையுடைய கர்மங்கள் நீங்குவன. அவையும் தியாகஞ் செய்தற்குச் சமர்த்த மன்று. காரணம் என்னை ? நிவிர்த்தியின்மையின். உத்பத்தி யின்றிச் செய்தற் கிச்சை யுடைய கர்மம் தியாகஞ் செய்தற்குச் சமர்த்தமாம்; பிரவிருத்தி நிவிர்த்தியைக் குறித்துக் கர்த்தா ஸ்வதந்தரமாகலின். உத்பத்தியான கர்மத்தின்கண்ணே அது பொருந்தாமையின், பிரதிஞ்ஞை செய்த அர்த்தம் அநுஷ்டானத்திற்கு யோக்கிய மன்ரும்; அசக்கியப்



பிரதிஞ்ஞையாகலானும். ஜீவித்திருக்கும் பரியந்தம் காமிய கர்மங்களும் நிஷித்த கர்மங்களும் செய்யமாட்டேன் எனப் பிரதிஞ்ஞை செய்தற்குச் சமர்த்த மன்று; நல்ல நிபுணர்கட்கும் அபராதம் பார்க்கப்படுதலினுலும், பிரமாணமின்மையானும். மோக்ஷத்தை யிச்சிப்பவன் நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்க; காமிய பிராயச்சித்த கர்மங்களை விடுக; ஆரம்பிக்கப்பட்ட பலத்தையுடைய கர்மங்களில் உபபோகத்தால் நசிப்பிக்க என்று பிரமாண மின்று; ஆநந்தியத்தானும். சம்பாதித்த கர்மங்கள் இவ்வளவு என்பது இன்று; சம்சாரம் அநாதியாகலின். அவைகட்குக் காமிய பிராயச்சித்த கர்மங்களால் நிவிர்த்தி யின்று. சுத்தி அசுத்தி சாமியமாயின், விரோத மின்மையின் என்னும் இதனுல் கூறப்படுகின்றது.—

81. அநந்தமாகலின் சகல காமியகர்மத்தின் தியாகம் செய்தற்குச் சமர்த்த மின்று. சென்ற அநந்த ஜன்மங்களில் நிஷித்த கர்மஞ் செய்திருக்கினும், அவ்வெல்லா நிஷித்த கர்மங்களையும் நன்கு தியாகஞ் செய்தற்கு ஆற்ற லின்று.

அற்றேல், சென்ற அநந்த ஜன்மங்களில் சம்பாதித்த கர்மங்கட்கு.—

82. எங்ஙனம் நிஷித்த கர்மங்கட்குப் பிராயச்சித்தத்தால் (நிவிர்த்தியுண்டாகின்றது), அங்ஙனம் அவைகட்கு நித்திய கர்மத்தால் நிவிர்த்தி எனின், நிஷ்பலமாகலின், நித்திய கர்மத்தால் காமிய கர்மாதிகட்கு நிவிர்த்தி யின்ரும்.

பிரமாணுபாவத்தானும். எங்ஙனம்.—

83. எங்ஙனம் பாப நிவிர்த்திக்கு வாக்கியத்தால் பிராய்ச்சித்தம் அறியப்படுகின்றது, அங்ஙனம் காமிய கர்ம நிவிர்த்திக்கு வாக்கியத்தால் நித்திய கர்மம் சாதநமென அறியப்பட வில்லை.

அற்றேல், பூர்வ ஜந்மங்களில் சம்பாதித்த காமிய கர்மங்களின் நாசம் காமியகர்மங்களானே உண்டாகின்றது எனின், அற்றன்று. எதனால்.—

84. ஈண்டு எங்ஙனம் பாபங்களினது நிவிர்த்தி பாபங்களா னன்று, அங்ஙனமே காமிய கர்மங்களினது நிவிர்த்தியும் காமிய கர்மங்களா னன்று; விரோத மின்மையின்.

இங்ஙனம் "கிரியைகளால் மோக்ஷஞ் சித்தித்தலின்" என்று நிராகரணம் செய்யப்பட்டது. அநந்தரம், அஞ்ஞானத்தின் சத்பாவத்திற் பிரமாண அசம்பவம் புகலப்பட்டது; அதன் பரிஹாரத்தின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

85. ஈண்டுக் காமிக ளநந்தமாகலின், ஸ்மிருதிகளோடு சுருதிகளும் மிகப் பிரயத்நத்தால் விதிக்கின்றன. ஆகலின், அநேக காமத்தைக் கொடுப்பது கர்மமாம்.

அநேகத்தன்மைபிராமாண்யத்தில் காரண பாவத்தை யடைவ தின்று. இதனால் கூறப்படுகின்றது.—

86. பிராமாண்யத்தின்பொருட்டு அநேகத்தன்மை ஒரு வஸ்துவினிடத்துப் பிரமாணத்தன்மை



யைப் பிரமாணங்கள் அடைஞ்செய்வ தில்லை. ஒருவஸ்துவின்கண் ஒரு பிரமாணத்திற்கே பிரமாணத்தன்மையாம்.

"யத்நத்தாற் பார்க்கினும்" என யாது கூறப்பட்டது அவ்விடத்தும் உமது அபராதமே. எக்காரணத்தால்? எதனால்.—

87. "லோகங்களைப் பரீக்ஷித்து" என்பதாதியால் ஆத்ம ஞாநத்தை விதிக்கும் நைஷ்கர்ம்ய பிரவண சாத்விகச் சுருதிகளாய அவற்றைக் கேட்கவில்லையா?

அற்றேல், "ஆத்மா வென்றே உபாஸிக்க. அரே மைத்திரேயி! ஆத்மா பார்க்கத்தக்கது" என்னும் அபூர்வ விதி சுருதியால், புருஷனுக்கு ஆத்ம தரிசனக் கிரியையில் நியோகம் நிச்சயஞ் செய்யப்படுகின்றது எனின், இங்ஙன மன்று; மோக்ஷத்திற் கேதுவாய சகல அநர்த்தத்திற்குங் காரணமான ஆத்மாவின் அறியாமையை நிவர்த்திக்கும் வஸ்துவின் யதார்த்த ஞாநம் புருஷ தந்திர மன்றாகலின். விதி அங்கீகரிக்கினும், இஃது அபூர்வ விதி யன்றாம். எதனால் கூறப்படுகின்றது.—

88. விதிப் பிரத்தியய † விடாதிகளின் அர்த்தமும் நியம (விதி), அல்லது பரிசங்கியா (விதி) ஆகின்றது. எதனால் அநாத்ம அதர்சனத்தானே பரமாத்மாவை உபாஸிக்கின்றோம்.

"எங்கட்கு இவற்றி னின்றும் அந்நியவிடத்து விசுவாச மின்று" என்று யாது கூறப்பட்டது, அது

† விட் - விதியை யுணர்த்தும் (சம்ஸ்கிருத பாஷையி லுள்ள) விகுதி.

வும் நித்திரையிற் பிரியமாய சித்த முடைய உன்னால் ஸ்வப்நத்திற்குச் சமானமாகப் பிரலபிக்கப்பட்டது. காரணம் என்னை? நாங்கள் பிரமாண பலத்தால் ஏகாத்மத் தன்மையைக்கூறுவதின்று; ஏகாத்மத்தன்மை ஸ்வயமே அநுபவ மாத்திர ரூபமாகலின். இதனானே, சர்வப் பிரமாண அவதார அசம்பவம் (இரண்டா மத்தியாய ஆரம்பத்தில்) கூறுவேம்; பிரமாண வியவஸ்தையும் அநுபவ மாத்திர ஆசிரயமாகலின். இதனாற் கூறப்படுகின்றது.—

89. எவ்வஸ்து வாக்கியம் ஒன்றானே அறியப்படும்; அதில் புருஷன் அந்நியவிடத்தி னின்றும் விசுவாசஞ் செய்யற்க. அப்பிரமேய ஸ்வத சித்த ஆத்மாவின்கண் விசுவாச மின்மை யாங்ஙனம்?

"விதி யின்றி" என்று யாது கூறப்பட்டது, அதுவும் அயுக்திபூர்வகம் போன்று நமக்குத் தோற்றுகின்றது. எதனால் காலாந்தரத்திற் பலத்தைக்கொடுக்கும் கர்மங்களில் இது பொருந்துகின்றது; ஆத்ம லாப காலத்திடைப் பலங்கொடுக்கும் ஆத்ம ஞானத்தின்கண்ணே இது பொருத்த மன்று எனக் கூறப்படுகின்றது.—

90. ஞானத்தால் சம்சார நிவர்த்தியாகிய இப் பிரத்தியக்ஷ பலம் அடையப்படின் (விதியின்றிய ஆத்ம ஞானமாய) அஃது உபகாரத்தின்பொருட் டன்று என்னும் வசநம் நியாய முடையதெனப் பிரதீதியாக வில்லை.

ஜைமினி சம்பந்தமான எந்த வசநத்தை உத்காடநஞ் செய்தாய், அதுவும் அவ ரபிப்பிராயம் அறியாமையானே கூறப்பட்டது. காரணம் என்னை? எதனால்



ஜைமினிக்கு எல்லா வேதங்களும் கிரியார்த்தமே என்னு மபிப்பிராயமன்று; இவ்வபிப்பிராய மிருக்குமாயின், (வியாசர்) "அதாதோ பிரஹ்மஜிஜ்ஞாஸா", "இச்சகத்திற்கு எதனி னின்றும் ஜன்மாதி" என்பன வாதி பிரஹ்ம வஸ்து ஸ்வரூப மாத்திர யதார்த்தத்தைப் பிரகாசிப்பிக்கும் பரமாயும், கம்பீர நியாயத்தோடு கூடியதாயும், சர்வ வேதாந்தார்த்தத்தையும் விசாரிப்பதாயுமுள்ள ஸ்ரீமத் சாரீரகம் இயற்றமாட்டார்; இயற்றினமையானும். ஆகலின், ஜைமினிக்கு எங்ஙனம் விதி வாக்கியங்கட்குத் தம தர்த்த மாத்திரத்தில் பிராமாண்யம். இங்ஙனமே ஏகாத்மிய வாக்கியங்கட்கும் அறியப்படாத வஸ்து பரிச்சேத சமானமாகலின் என்னு மபிப்பிராயமே என்று இதனால் இது கூறப்படுகின்றது.—

91. விதியை அதிக்கிரமித்த அர்த்தவாத வேத வாக்கியங்கட்கே கிரியார்த்தத்தன்மை யிருக்கின்றது. தத்துவமசி யாதி வாக்கியங்கட்குக் கர்மார்த்தத்தன்மை யாங்ஙனம் கூறும்?

மற்றும், ஏகாத்மிய பக்ஷத்திற் போன்று, அதிர்ஷ்டார்த்த கர்மங்களில் உமது பக்ஷத்தின்கண்ணும் பிரவிருத்தி துர்லக்ஷியமேயாம். எதனால்.—

92. ஸ்வர்க்கத்தை யிச்சிப்பவன் அக்நிஹோத்திரம் செய்க என்று எங்ஙனம் விதி, இங்ஙனம் தேஹத்தி னின்றும் வெளிப்பட்ட புருஷனுக்கு ஜைமினியின து பக்ஷத்தில் எங்ஙனம் கர்த்திருத்தன்மை (பொருந்தும்).

சர்வ சரீராதி கர்ம சாதந ஸ்வபாவத்தை நிவர்த்தித்து, ஆத்மா மாத்திரமா யிருப்பவ

னுக்குக் கர்மத்தின்கண் ணதிகார மின்று,
எதனால்.—

93. சர்வப்பிரமாண சம்பவ மின்றிய நான் என்னும் விருத்தியாய ஒரே சாதநத்தோடு, இஃது என்னும் அர்த்தத்தைக்கொள்ளாத ஞாநியை ஜைமிநி எங்ஙனம் பிரேரிப்பார்?.

பிரவிருத்திகாரண அபாவத்தானும். எதனால்.—

94. ஆத்மாவிற்குச் சுக துக்காதிகளோடு சம்பந்தம் இன்று. அந்தக்கரணத்தோடு ஈக்ஷிக்கப்படுகின்றது. (சுகதுக்காதிகள்) பராக்காகலின், (ஆத்மா) பிரத்தியக்காகலின். எங்ஙனம் ஜைமிநி பிரேரிப்பார் ?

மற்றும்,

95. சரீரத்தோடு ஆத்மாவிற்குச் சதா சம்பந்தமேயின்று; விஷயங்களோடு தூரத்தின்கண்ணே யின்று. ஸ்வர்க்காதிகளில் எங்ஙனம் சுக மிருக்கும் ?

எதனால் வேறுவிதமாகப் பொருத்த மன்று.—

96. அதனால் காரகாதி சொரூப மறிந்த நரத்தன்மை அபிமான முடைய புருஷனை ஸ்வீகரித்து மந்திரம் "செய்க" என்று கூறுகின்றது; அவ்விரண்டு மின்றிய ஞாநியைக் குறித் தன்று.

"கிரியையை விட்டு" என்று யாது கூறப்பட்டது, அதுவும் பொருத்தமே! அன்றும். அங்ஙன மாயினும், யாதாவதொரு கிரியையை யாதாவதோரிடத்து அத்தியாஹாரணஞ் செய்வ தன்று; பின்னையோ, எது எவ்விட



த்து அபிப்பிராயப்படும் சம்பந்தம் பொருந்துவதற்குச் சமர்த்த மாகின்றது, ஆகாங்க்ஷையையும் வாக்கியத்திற்குப் பூரணஞ் செய்கின்றது, அதுவே அத்தியாஹாரஞ் செய்யத்தக்கது. இவ்வித விசிஷ்டக்கிரியையும் நம்மால் அங்கீகரிக்கப்பட்டதே. அதுவும் அங்கீகரித்த வாக்கியார்த்த அவிரோதியே. அபூதார்த்தத்தின் உத்பன்ன பல மன்றாகலின், சட்பாவ விகார மின்றியும், சர்வ துவைத அநர்த்த மின்றியும், பராதீனப் பிரகாச மின்றியு முள்ள ஆத்மவஸ்துவை அறிவுறுத்தலின் (அஸ்மி) இருக்கின்றேன் என்பதாதி தனது மஹிமையாய சித்தார்த்தத்தைப் பிரதிபாதிக்கும் சாமர்த்திய முடைய கிரியா பதம் அங்கீகரிக்க; விபரீதார்த்தத்தைப் பிரதிபாதிப்ப தன்று.—

97. தான அர்த்தத்தில் (தாவேத்) ஓடுக என்னும் பதம் எங்ஙனம் பிரயோகஞ் செய்வ தின்று, அங்ஙனமே ஸ்வத சித்தார்த்த வாச்சியமாய வஸ்துவின்கண் (ஏதி) செல்க என்பதாதி பதமும் இச்சிப்ப தில்லை.

உரைத்த வஸ்துவின் விருத்தாந்தப் பிரதிபாதந மின்றித் தத்துவமசியாதி வாக்கியம் வேறு வாக்கியார்த்தத்தைப் புகல்வன வல என்று நிச்சயித்தற்குச் சமர்த்தமா மெனக் கூறப்படுகின்றது.—

98. தத்துவமசியாதி வாக்கியங்கள், ஸ்வயம் சித்தார்த்தத்தைப் போதித்தலான், தேவர்களானும் வேறு அர்த்தம் நன்கு பார்த்தற்குச் சமர்த்த மன்றும்.

எதனால் இங்ஙனம்.—

99. இக்காரணத்தால் சர்வ ஆசிரமத்திலு முள்ள புருஷர்கட்கும் நன்கு அநுஷ்டிக்கப்பட்ட வாக் மன காய கர்மங்களால் முக்தி யுண்டாவ தின்று; அஃது எதனல், ஞாநத்தானே (உண்டாகின்றது.)

அக்காரணத்தாலும், இதுவும் பொருந்து கின்றது.—

100. இதனல் தமது மனோரதத்தால் நன்கு கற்பிக்கப்பட்ட (தார புத்திர தனதிகளின் பரித்தியாகப் பிரயாச மின்றி மோக்ஷ முண்டா மென்னும்) தீய புத்தியை யுடையவர்களினது வாக்குகள் சுரோத்திரியத்திடையே சோபிக்கின்றன; ஆத்ம வேதிகளிடத் தன்று.

முதல் அத்தியாயம் சமாப்தம்.



ஸ்ரீபரமாத்மநே நம:.

## இரண்டாம் அத்யாயம்.

பிரத்தியக்ஷாதிகட்கு இவ்வித விஷய மன்றாகலின், அவற்றிற்குத் தம தாரம்பக விஷய ‡ உபரிபாதியாகலின், ஆத்மாவும் சர்வப் பிரமேய வைலக்ஷண்யமாகலின், சர்வ அநர்த்த காரண அஞ்ஞாநத்தை நிவர்த்திக்கும் ஞாநதிவாகர னுதய காரணத்தன்மை, வஸ்து மாத்திர யதார்த்தத்தைப் பிரகாசிக்குஞ் சாமர்த்தியமாய தத்துவமசியாதி வசநங்கட்கே என அநேக உபபத்திகளால் காண்பிக்கப்பட்டது. இதனல் அவ்வர்த்தத்தின் பிரதிபத்தி யின்மைக்கண் யாதுகாரணம்? அதன் நிவர்த்தியின்பொருட்டு இரண்டாம் அத்யாயம் ஆரம்பிக்கப்படுகின்றது.—

1. தத்துவமசி என்னும் (வாக்கியத்தைக்) கேட்ட புருஷன் வாக்கியார்த்தத்தை அறிகின்றான். இதனல் அறியானாயின், த்வம் பதார்த்தம் அறியாதவ னாகலின், இதனல் த்வம் பதார்த்தப் பிரக்கிரியை கூறப்படுகின்றது.

நான் பிரஹ்ம மென்னும் யாதொரு இந்த வாக்கியார்த்தம், அதன் ஞாநம், வாக்கியத்தானே என்று பிரத்தியக்ஷாதிகட்கு இங்ஙனம் விஷய மன்றாகலின் எனக் கூறப்பட்டது, அதன் விசுத்தியின்பொருட்டு அநைகாந்திகத்தன்மை பூர்வ பக்ஷரூபத்தால் ஸ்தாபிக்கப்படுகின்றது.—

2. சர்வ அநாத்ம நிவர்த்தியிலும் * சிலர் மோக்ஷமடைகின்றனர்; † சிலர் கேட்கப்பட்ட வாக்கிய

‡ உபரிபாதி - விஷயம். * விராட் † பிருகு

ஸ்மிருதியினுலும் (மோக்ஷமடைகின்றனர்); ‡ சிலர் வசநம் ஸ்மரணஞ் செய்விப்பதனுலும் மோக்ஷ மடைகின்றனர்.

இந்தப் பிரசங்கத்தால் வேறு சுரோதா உபந்யாசம் இரண்டிடத்தும் சம்பாவனையின் பொருட்டுக் கூறப்படுகின்றது.

3. வாக்கிய சிரவண மாத்திரத்தானும் பிசாசகன் போன்று அடைகின்முன். ¶ மூன்றின்கண்ணும் பிரயத்ந மின்றி ஞான முண்டாகின்றது; ஸ்மரணஞ் செய்விப்பதன்கண்ணே நிச்சயமாம்.

இஃது அநைகாந்திக முடைய ஹேது வன்று. எதனுல்.—

4. உரைக்கப்பட இச்சர்வ மஹிமையும் வாக்கியத்திற்கே யென வறிக. வாக்கிய மின்றி வாக்கியார்த்தத்தை உண்மையாக ஒருவரும் அறிபவரிலர்.

வாக்கியமும் பிரதிபாதநத்தின்பொருட்டுப் பிரவிருத்தமாகலின், பிரதிபாதிப்பதேயாம்; சர்வப் பிரமாணங்கட்கும் இங்ஙனம் விருத்தாந்த மாகலின்.—

5. சத்தா யிருக்கின்முய் என்னும் இவ்வாக்கியத்தால், வாக்கிய ஞாந முடைய புருஷனுக்கு நானென்னும் பிரதீதி விஷய சரீரத்தின்கண்ணும் விரோதமுண்டாவதின்று; அந்தப் பிரதீதி யின்றிய இந்திரியத்தின்கண்ணும் விரோத முண்டாவ தின்று; பிரத்தியகாத்மாவினிடத்தும் விரோதமுண்டாவ தின்று; துக்காதி தர்ம விசிஷ்டத்தின்கண்ணும் விரோதந் தோன்றுவ தின்று.

‡ சுவேதகேது.

¶ விராட் பிருகு பிசாசகன்.



6. விரக்தி யின்றியவனுக்குச் சம்சாரத்தினின்றும் நிவிர்த்தி யடையவேண்டு மென்னு மிச்சை அதனுல் உண்டாவ தில்லை; திருஷ்ணை நீங்காத புருஷனுக்கு முமுக்ஷுத்தன்மை யில்லை.

7. முமுக்ஷு அல்லாதவனுக்கு ஈண்டுக் குரு பாத சமீபத்திற் செல்லல் இன்று. குருவின் சம்பந்த மின்றி வாக்கியத்தின் சிரவண மின்று.

8. அங்ஙனமே, வாக்கிய மின்றி ஓரிடத்தும் பத பதார்த்தங்க ளிருப்பன வல. அவையின்றி அந்நுவய வியதிரேகங்களும் எவற்றை ஆசிரயித் திருக்கும்?

9. அந்நுவய வியதிரேகங்க ளின்றி, வாக்கியார்த்த ஞாநம் உண்டாவ தின்று. வாக்கியார்த்த ஞாந மின்றி அஞ்ஞாநத்தின் த்வம்சம் பொருந்துவ தின்று.

10. அஞ்ஞாநத்தின் த்வம்சம் இன்றிப் புருஷார்த்தம் துர்லபம்; ஆகலின், புகன்றதன் சித்தியின்பொருட்டு மேற்கிரந்தம் ஆரம்பிக்கப்படுகின்றது.

11. † வர்ச்சஸ்கம் அந்ந காரியமாகலின், எங்ஙனம் அநாத்மா வென்று அறியப்படுகின்றது? அதன் பாகமாய தேஹேந்திரியங்களையும் அது போன்று ஏன் பார்ப்ப தில்லை?

† வர்ச்சஸ்கம்-மலம்.

ஆதி யந்தங்கட்கு அநாத்மத்தன்மை பிரசித்தமாகுமாயின், மத்தியில் பிரதிபந்தம் யாது?—

12. பூர்வம் அநாத்மரூப அன்னத்தையே புஜித்து, அவித்தையினுல், (தேகம்) ஆத்மத்தன்மையை அடைந்தது; ஆகலின், விவேகிகள் தேகத்தை மாலையின் சம்பந்தம் போன்று பார்க்க.

இங்ஙனம் (கூறியும்) என் வசநம் அங்கீகரியா திருப்பின், ஸ்வயமே இந்த அசுசிக்கூட்டமாய சரீரத்தி னின்றும் வியோக மடைவாய்.—

13. எதுவரை இச்சரீரத்தி னின்றும் லோகாந்தரம் அடையவில்லை, அதுவரை இருக்கின்றேன் என அபிமானிப்பாய்; நாய்களால் தேஹஞ் சூழப்படுங்கால், நீ இவ்விதம் அபிமானஞ் செய்யமாட்டாய்.

14. பாதத்தால் சிரசில் ஆக்ரமித்து ஒரு நாய் அந்நிய சுவானங்களைக் கோபிக்கின்றது. (நாய்களும் தமதென் றபிமானிக்கும்) சாதாரண தேஹத்தைப் பார்த்து அதன்கண் ஆ! ஆ! எதனுல் ஆசக்தனுகின்ருய்?

புத்தியாதி தேஹபரியந்தம் அநாத்மாவென்னு மிவ்வர்த்தத்தைச் சுருதியும் கூறுகின்றது என்னு மிது கூறப்படுகின்றது.—

15. எங்ஙனம் ஒரே பீஜம், பதர் நெல் திரண அம்சங்களால் மூன்றுவித மாகின்றது; அது போன்று அன்னம், புத்தி மாம்ச புரீஷ (மல) அம்சங்களால் (மூன்று விதமாய்) இருக்கின்றது.



உரைத்த அர்த்தத்தின் ஞான மிருக்கின், வித்துவான் ராகத் துவேஷங்களால் விகாரத்தை யடைவ தில்லை என்னு மிவ்வர்த்தத்தின் பிரதிபத்தியின்பொருட்டுத் திருஷ்டாந்தம்:—

16. மலத்தைப் பரித்தியாகஞ் செய்யுங்காலத்தும், தோஷமாக அறியுங்காலத்தும், ஒருவன் தோஷங் கூறுவானுயின், அவனுக்கு அவ்விடத்துக் கற்பிப்பவன் என்ன ஆகின்ருன்?

17. அது போன்று, விவேகத்தால் சூக்ஷ்ம ஸ்தூல தேக (அபிமான)ங்கள் விடப்படுங்கால், தோஷங் கூறப்படுமாயின், அவ்விடத்து வித்துவானுக்கு அவ்விரு சரீரங்களின் பொருட்டு என்ன உண்டாம்?

இவ்வளவே, நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்னும் வாக்கியார்த்த ஞானத்தின்கண் காரணம். புத்தியாதி தேக பரியந்தம் நான் எனது என்னும் பாதகப் பிரத்தியயமின்றிய கிரஹம் நீங்கின், ஒன்றன்கணின்றும் பகுக்கப்படுவ தின்று. அத்விதீயமாகிய பிரத்திய காத்மாவிடத்து நிலைத்திருத்தலான் எனக் கூறப்படுகின்றது.—

18. சத்துருவினிடத்தும், பந்துவினிடத்தும், தன் தேகத்தினிடத்தும் சமமாய ஏகாத்மத்தன்மையைப் பார்க்கும் விவேகிக்குத் தனது தேஹ அவயவங்களி னிடத்துப் போன்று கோபம் எங்ஙனம் (உண்டாம்)?

இதனுனும் தேஹாதி அநாத்மா.—

19. கடாதி போன்று திருசியமாகலானும், அவ்விதக்கரணங்களால் அறியப்படுதலானும், ஸ்வப்நத்தின்

கண் அந்நுவய மின்மையானும், தேஹம் அநாத்மா வென்று வித்துவான்களால் அறியக்தக்கது.

தேஹாதி கார்ய காரண சங்காத வியதிரேக அவ்வியதிரேகங்களைப் பார்ப்பவனுக்குப் பிரத்தியக்ஷமாகவே விருத்த கார்யம் தோற்றுகின்றது.—

20. எது நாற்காற் (பிராணி) களால் சர்வ சக்தியால் இழுக்கப்பட்டுப் பஞ்சுபோற் சஞ்சரிக்கின்றது அது சரீரம்; அதனையே அஞ்ஞாநிகள் நான் என்னும் புத்தியால் கிரகிக்கின்றனர்.

பிரசித்தியாகலின், பிரகரணார்த்த உபசம்ஹாரத்தின்பொருட்டுக் கூறப்படுகின்றது.–

21. இங்ஙனம் ஸ்தூல (தேஹ)த்தை யுக்தியால் நிராகரித்து, ஆகாசத்தின் நீலத்தன்மை போன்று, யுக்திகளால் சூக்ஷ்ம சரீரத்தை நிராகரிக்க. அதனால் ஆத்மாவின் (சித்தி யுண்டாகின்றது.)

எங்ஙனம் சூக்ஷ்ம தேஹத்தை நிராகரிக்க? எனின், கூறப்படுகின்றது.—

22. நானென்னுந் தன்மை, என தென்னுந்தன்மை யத்ந இச்சைகள், ஆத்ம தர்மங்க ளல்ல; கர்மத்தன்மையாற் (திரிசியத்தன்மையாற்) பிரதீதியாகலின், மெலிதல் போன்று. நாசமாதலானும், வஸ்திரம் போன்று.

வைதர்ம்யத்தின்கண் திருஷ்டாந்தம்.—

23. எங்ஙனம் ஜ்வலிக்கும் அக்நி உஷ்ணத்தன்மையைத் தஹிப்ப தின்று, ஸ்வரூபமாகலின், அங்ஙனமே ஆத்மா தனது நான் என்னும் பிரதீதியை விஷயஞ் செய்யாது; ஸ்வரூபத்தன்மை சமானமாகலின்.



ஓராத்மாவிற்குக் கர்ம கர்த்திருத்தன்மைகள், சர்வ விதத்தும் பொருத்த மல்ல எனக்கேட்டு, நான் என்னும் பிரத்தியயக் கிராகியத்தைக் கிரகிக்கும் கிராககம் ஆத்மா வென்று மீமாம்சகன் சங்கிக்கின்றான். அதன் நிவிர்த்தியின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

24. எப்பாவமானது எதனது கர்மமாகின்றது, அஃது அதன் கர்த்திருத்தன்மை யுடையதாவ தின்று; எதனால், கடஞானம் போன்று, அதனால், நான் என்னும் ஞானம் திருஷ்டாவின் கர்மமாவ தின்று.

இவ்விடத்துக் கூறப்படுகின்றது. பிரத்தியக்ஷத்தால் ஆத்மாவிற்குக் கர்ம கர்த்திருத்தன்மை அங்கீகரிக்கின்,அதன் பாத உபஜீவி அநுமானத்தால் பிரத்தியக்ஷ நிவர்த்தனம் அயுக்தம் என்பது சங்கை; அதன் நிராகரணத்தின்பொருட்டுப் பிரத்தியக்ஷ உபந்நியாசம்.—

25. எவ் வந்தக்கரணத்தில் எவ் வகம் பிரத்தியயம், திருஷ்டாவால் பார்க்கப்படுகின்றது, அவ்வகம் பிரத்தியயம் அவ் வந்தக்கரணத்தின் குணமே; திருஷ்டாவி னிடத்தி லிருப்ப தன்று. எதனால், திருஷ்டாவின்போதம் போன்று (திருஷ்டாவின் குணமாயின்) (அது) திருசியத்தன்மையைப் பெறமாட்டாது.

பிரத்தியக்ஷத்தானே, உம தங்கீகாரப் பிரத்தியக்ஷம் ஆபாசஞ் செய்யப்பட்டமையின், அநுமானம் நன்றாக ஸ்திதமாம். இதனால் அதுவே ஆரம்பிக்கப்படுகின்றது. அவ்விடத்தும் விகல்ப தூஷண கதனம்.—

26. தன்னிடத் திருக்கும் குணம் ஆத்மரூபத் தால் அறியப்படுவ தின்று; ஆத்மாவின் அம்சத்தால் அறியப்படுவ தின்று; அபின்னமாகலானும், சமமாக லானும், நிரம்சமாகலானும், அகர்மமாகலானும்.

† யுகபத்தும்அன்று, கிரமமாகவு மன்று, இருவிதத்தும் ஒரு தர்மிக்குக் கிராகிய கிராககத்தன்மை பொருத்த மன்றெனப் பிரதி பாதித்தற்பொருட்டுக் கூறப்படுகின் றது.—

27. திருஷ்டிருத்தன்மையால்உபயோகமாகலின், அப்பொழுதே திருசியத்தன்மையை யடையாவாம். காலாந்தரத்தில் திருசியத்தன்மை யெனின், திருஷ்டி ருத்தன்மை இச்சிக்கப்படுவ தின்று.

கூறிய நியாய பலத்தால் மமத்துவாதிகளும் அநாத்ம தர்மங்களாயிருக்க; அவற்றிற்கு அநாத்மத் தன்மையால் வியவஹார மிருத்தலின். நான் என்னும் ரூபத்திற்கோ பிரத்தியக்காத்ம சம்பந்தித்தன்மை யாற் பிரசித்தியாகலானும். "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னுஞ் சுருதியானும், அநாத்ம தர்மத்தன்மை அயுக்தம் எனின், அற்றன்று.—

28. நான் பிரஹ்மம் என்னும் வாக்கியத்தால் நான் என்னும் தர்மம் அபின்ன மெனின், நான் ‡ கௌரன் என்னும் வாக்கியத்தால் வியபிசாரமாகலின், அவ்வாக்கியம் அதை நிவர்த்திக்கின்றது.

எங்ஙனம் வாக்கியம் அதனை நிவர்த்திக் கின்ற தெனின், கூறப்படுகின்றது.—

---

† யுகபத் - ஏககாலம்.

‡ கௌரன் - கனமுடையன்.



29. யாதொரு இந்த ஸ்தாணு புருஷன் என் னும் (சாமானாதிகரண்யம்) புருஷ ஞானத்தால் ஸ்தாணு ஞானம் (பாதிக்கப்படுவது) போன்று, பிரஹ்மமா யிருக் கின்றேன் என்னும் ஞானத்தால் சர்வ அஹம் புத்தியை நிவிர்த்திக்க.

அஹம் பரிச்சேதம் வியாவிருத்திக்கு மிடத்து, வியாவிருத்த மின்றிய துவைத சமூகங்களுள் ஒன்றும் எஞ்சுவ தின்று, இரண்டாவதன் 'சம்பந்தம் அதன் மூலமாக வின். இதனால் கூறப்படுகின்றது.—

30. அஹம் (நான் என்னும்) புத்தி நிவர்த்தி யாகு மிடத்து, மம (எனது என்னும்) புத்தி லயமடை கின்றது; அது (மம புத்தி) அஹம் பீஜத்தால் சித்திக் கின்றது. அந்தகாரம் நீங்கின், சர்ப்பம் யாண்டு?

தாத்பர்ய திருஷ்டாந்த அம்சம், அறி வுறுத்தற்பொருட்டுத் திருஷ்டாந்தம் வியாக் கியானஞ் செய்யப்படுகின்றது.—

31. அந்தகாரத்தால் அமிழ்த்தப்பட்ட சித்த முடைய புருஷன், பிராந்தியால் ரஜ்ஜுவின்கண் சர்ப் பத்தைப் பார்க்கின்றான்; அதனால் பிராந்தி யின்றி மாலையின்கண் உரகம் பார்ப்ப தில்லை.

அநுவிருத்த மின்மையானும்; அஹங் காரம் ஆத்ம தர்ம மன்றாம்.—

32. அஹங்கார தர்மம் ஆத்மாவிற்காயின், சுஷுப்தி மோக்ஷங்களினு மிருக்க. எதனால் இரு ப்ப தில்லை, அதனால், இந்த நான் அந்நியத்தினதே யாம்.

ஆத்ம தர்மத்தன்மை அங்கீகரிக்கின், அபரிஹார்ய தோஷமும் வரும்.—

33. அஹங்காரம் ஆத்ம தர்மமாயின், அது ஞானம் போன்று நித்தியத்தன்மையை அடையும். நித்தியமாயின், மோக்ஷ சாஸ்திரங்கள் நிச்சயமாக வியர்த்தத்தை யடையும்.

ஸ்வாபாவிக தர்மத்தன்மையை அங்கீகரிக்கினும், மாமுதலிய பழம் போன்று பரிஹார முண்டாகின்றதெனின், அற்றன்று.

34. மா (ம்பழம்) முதலியன பரிணாமியாகலின், வேறு குணத்தின் (பிராப்தியில்) குணம் நஷ்டமாகின்றது. பிரஹ்மமோ அவிகாரி; அதன் (தர்மம் நசிப்பது) அன்று; திருஷ்டா என்னுஞ் சுருதியான்.

அஹங்காரம், ஆவிர்ப்பாவ திரோபாவமாகலின், அதன் தர்மிக்கும் அநித்தியத்தன்மை பிராப்தமாம்.—

35. உத்பத்தி நாசமுடைய அஹங்காரத்தின் ஸ்திதியால், ஆத்மா, அநித்தியத்தன்மையை யடையும். தர்மங்கள் ஆவிர்ப்பாவ திரோபாவமாய்த் தர்மியை விகாரஞ் செய்கின்றன.

அநித்தியத்தன்மை யிருக்க. எதனை நிந்திப்போம்? பிரமாண உபபன்னமாகலின். எனின், அற்றன்று.—

36. குசாக்கிரீய புத்தியால் ஆத்மாவினது ஸ்வத சித்த சதா நாச மின்றிய சாக்ஷித்தன்மையைக் கடம் போன்று தள்ளுதற்குச் சமர்த்த மன்று.



இந்த ஹேதுவினாலும் அஹங்காரத்திற்கு ஆத்ம தர்மத்தன்மை யின்மை நிச்சயஞ் செய்க.—

37. ஆத்மாவிற்கு அஹங்காரம் பிரமாணங்களால் அறியப்படுதலினாலும், கடாதி போன்று(ஆகின்றது). எதனால், பிரமாணங்களின் (சித்திக்குப் பூர்வம் ஆத்மாவின்) சித்தியாம். அந்தப் பிரமாணங்களால் எங்ஙனம் ஆத்மா சித்திக்கின்றது?

தர்ம தர்மிகட்குப் பரஸ்பரம் விருத்த ரூபமாகலின், பொருத்த மின்று.—

38. தர்மியும் விருத்தமாகலின், திருசிய குண சம்பந்தம் இன்று. வாயுவால் அசைக்கப்படாத ஜ்வாலையை யுடைய அக்கினியைச் சைத்தியம் சம்பந்திப்பதின்று.

ஆகலின், † விஸ்ரப்தம் அங்கீகரிக்க.—

39. திருஷ்டிருத்தன்மையும் திருசியத்தன்மையும் ஒன்றன்கண்ணே ஒரு காலத்து ஓரிடத்துமில்லை. திருசியமாய ஞானத்தால் திருஷ்டா, திருசியமன்று; திருசியத்தால், திருஷ்டிரு திருசிய மன்று.

சர்வ வியவஹார லோபமும் அடையும். எதனால்.—

40. திருஷ்டாவாய ஆத்மாவும், திருசியமாய புத்தியால் கர்மத்தன்மையை அடையுமாயின், (அப்பொழுது யௌகபத்தியம் (வரும். திருஷ்டாவாகலின், இரண்டற்கும்) திருசியத்தன்மை யின்று. (ஆத்மா திருசி

† விஸ்ரப்தம்-ஸ்வயம் கல்பிதம்.

யத்தால் அறியப்படுமாயின்) சுருதியும் வியர்த்தத்தை யடையும்.

எதனால்? எக்காரணத்தால்.—

41. லோப மின்றிய திருஷ்டிக்குத் திருசியத் தன்மை யின்று. திருசியத்தன்மை யிருக்குமாயின், திருஷ்டிருத்தன்மை யாங்ஙனம்? (திருசியத் தன்மை திருஷ்ட்ருத்தன்மை ஒன்றற்கு) இருக்கின்ற தெனின், திருசிய மின்றித் திருக் கொன்றே யிருக்கும்; அல்லது சாக்ஷி யின்றிய ஜகத் திருக்கும்.

உரைத்த யுக்தியைத் திடஞ் செய்தற்கு ஆகம உதாஹரணங் கூறப்படுகின்றது.—

42. ஆத்மாவி னின்றும் அந்நியமாய வெல்லாம் ஆர்த்தம் (நாசம்), அல்லது, ஈதன்று ஈதன்று என நிர்க்குணப் பிரஹ்மத்தைப் பன்முறை கூறுகின்றது. எங்ஙனம் சுருதி உபேக்ஷிக்கின்றது?

43. மஹாபூதங்கள் அஹங்காரம் என்னும் இவை க்ஷேத்திரமென்று கூறப்படுகின்றன. விஸ்வேஸ்வராது மதத்தானும் திருசிக்குத் துவைத சம்பந்த மின்று.

இப்பொழுது பிரகிருத அர்த்த உபசம்ஹாரஞ் செய்யப்படுகின்றது.—

44. இங்ஙனம் இந்த மித்தையா சித்தமாயும், அநாத்மாவாயும், மோஹ மூலமாயும், துர்ப்போத மாயுமுள்ள த்வைதம் யுக்திகளால், ஆத்மாவி னின்றும் பிருதக் கென அறியத்தக்கது.

எதனால் துவைதத்திற்கு மித்தியா சித்தத் தன்மை எனின்,—



45. ஆத்மாவி னின்றும் அந்நிய வஸ்துக்கட்கு வேறாக (சத்தை) இன்று; ஆத்மாப் போன்று ஆத்மத் தன்மையானும், (சத்தை) இன்று; ஆகலின், அஹங்காராதி, ஆத்மாவி னிடத்திற் கற்பிதமே யாம்.

ஆகலின், அஞ்ஞாந காரியம் இது.—

46. திருசியம் சப்தாதிக ளென்று நிச்சயம். திருஷ்ட்ருவும் நிர்க்குணம் பிரஹ்மம் (என நிச்சயம்). அஹங்காரம் அவ்விரண்டையும் தரித்து, ஆத்மாவி னிடத்திற் பிராந்தியைச் செய்கின்றது.

அதனானே, இந்த அபின்ன ஆத்மாவிற்குப் பேத புத்தி.—

47. ஒரே திருக்கு, சர்வ பூதங்களிலும் திருசியங்களால் அநேகம் போன்று விளங்குகின்றது; ஜல ஆதார பேதத்தால் † மயூக சிருக்வியின் பேதம் போன்று.

உரைத்த பொருளின் பிரதிபத்தியின் பொருட்டுத் திருஷ்டாந்தம்.—

48. எங்ஙனம் ஒருவனுக்கு அந்நிய கல்பனத்தால் மித்துருத்தன்மை, உதாசீனத்தன்மை, சத்துருத்தன்மை, அங்ஙனமே அபின்ன சித்திற்கு, அந்தக்கரண ஆசிரயம் பேதம்.

49. எங்ஙனம் ஜலபாத்திரங்களால், சூரியனது பிரதிபிம்பரூபக் கிரகணம் சர்வப்பிரகாரத்தும் (உண்டாகின்றதோ), அங்ஙனமே ஆத்மாவிற்குப் புத்தி

---

† மயூகம் - கிரணம்; சிருக்வி - மாலையை யுடையவன் (சூரியன்). (கிரணமாலை யுடையவன் என்பது பொருள்).

களால் அதன் கிரியையின் அடைவும், அதன் ஆகிருதி யின் அடைவும், அதன் தேசத்தின் அடைவுமாம்.

விருத்த தர்மங்கட்கு ஓரிடத்தில் பொரு த்த மின்மை யின்று. காரணம் என்னை?.—

50. கற்பிதங்கள் அவஸ்துவாகலின், ஓரிடத்தி லும் பொருந்தும்; (காமுகன் - சந்நியாசி - நாய்கட்கு) போக யோக்கியம், சுத்தம், நல்ல ரசமுடையது என்று ஒரே ஸ்திரீ தேஹத்திற் றோற்றுவது போன்று.

இந்தக் கிரியா காரக பல ரூப ஆபாசம் கிஞ்சிற்றும் பரமார்த்த வஸ்துவை ஸ்பரி சிப்ப தின்று; அது மோஹ மாத்திர உபா தான மாகலின்.—

51. இரண்டாவது வஸ்துக்க ளில்லா திருப்பினும் மித்தியா அபிமான மாத்திரத்தால், ஸ்வரூப ரூப ஆத் மாவை, லோகத்தவர்கள் † சோமசர்ம பிதாப் போன்று வஞ்சிக்கின்றனர்.

---

† அநேக விடத்துப் புஜிப்பவனும், பிக்ஷை வாங்குபவ னும், மிகுந்த தரித்திர முடை யவனுயு மிருந்த ஒரு பிரஹ்மச் சாரி, பஞ்ச காலத்தில் ஒருகைச் சத்துமாவைக் கையில் வைத்து மூடிக்கொண்டு துக்கத்தால் ஒரு பர்வதத்தின்கண்ணுள்ள விரு க்ஷத்தின் நிழலில் படுத்துக்கொண்டு இங்ஙனம் மனோரதஞ் செய்தான்:—

“ கையிலுள்ள சத்துமாவை விட்டு, அச் சத்துமாவால் சில பசுக்களை விலைக்கு வாங்கி விருத்தி செய்வேன்; அவையும் ஐந் தாறு வருஷங்களில் அநேகங் கன்றுகளை யீனும்; அவற்றால் யதேஷ்டஞ் செய்வேன்; அதனால், தன தான்யாதி யெல்லாம் உண்டாம்; அவற்றால், தாசன் தாசி முதலியவர் இருக்கும் அநேக வீடுகளைச் சம்பாதிப்பேன்; இவ்விதச் சம்பத்தைப் பார்த்து மிகு



வஸ்துவின் யதார்த்தத்தை அறியாமை யாய படலத்தால் மறைக்கப்பட்ட நேத்திர முடையவனாய்.—

52. நல்ல புருவம், நல்ல நாசி, நல்ல முகம், நல்ல நேத்திரம், சுந்தரம்,ஆச்சரியம் ஆகிய இவைகளையுடை மையின், ரமித்தற்கு யோக்கியம் எனக் கற்பனாமாத்திர நல்லமோஹத்தால்அசுசியைஆலிங்கனஞ்செய்கின்றான்.

விடவேண்டு மென்னும் இச்சையுடைய சர்வ அநர்த்த சமுகத்தினது மூலம் அஹங்காரமே. அத ற்கு ஆத்ம, அநாத்ம சம்பந்தமாகலின். பரமார்த்தமாக வோ,ஆத்மாவிற்கு அவித்தை அவித்தையின் காரியங்க

---

ந்த யோக்கியதை யுடைய ஒருவன் தன் கந்நிகையை எனக் குக் கொடுப்பான்; பின்னர் விதிப்பிரகாரம் கிரஹஸ்த தர்மத் தை யனுசரிப்பேன்; அதனால் வம்சத்தை விர்த்தி செய்யும் புத்திரனைப் பெற்று, **சோம சர்மா** என்றுஅவனுக்கு நாமஞ் சூட்டுவேன்; பின்னற் குடும்ப சௌக்கியத்தை அநுபவிக்குஞ் சமயத்தில், அழுதுகொண்டு மாதாவி னிடத்தில் வரும் சோம சர்மாவை, தன் காரிய பரவசத்தால் ஆதரிக்காது செல்லும் என் பார்யையைப் பார்த்து,புத்திர நிமித்த கோபத்தால் அவளை அடிப்பேன் ” என்று இவ்வாறு சிந்தித்துக் கையை ஓங்கி னான். அதனால், பிக்ஷாபாத்திரம் இரண்டு துண்டாக விழுந்தது; சத்துமாவும் வாயுவின் வேகத்தால் எத்திசையும் சிதறிப்போ யிற்று. அதன் பின் அஹோ! கஷ்டம்! நஷ்டமானேன்!! மந்த பாக்கியன் நான்! எனது சத்துமாவும் போய்விட்டது; என் செய்வேன்!! என்று எழுந்து புலம்பினான்.

இது திருஷ்டாந்தமாகக் கூறப்படுகின்றது என்று இதற்கு வியாக்கியானமாய சந்திரிகையில் **ஸ்ரீமத் அநுபமஞான விபவ ஞானோத்தம மிஸ்ரா**வர்களால் வரையப்பட் டிருக்கின்றது.

ளோடு சம்பந்தம், இருந்தது மின்று, இருக்கின்றது மின்று, இருப்பது மின்று; அது நஷ்ட மின்றிய திருஷ்டி ஸ்வபாவமாகலின்.—

53. திருசியங்களோடு கூடிய அந்தக்கரணம் அந்தத் திருசியங்களின் திருஷ்டா வாகின்றது; திருஷ்டாவோடு கூடிய அந்தக்கரணம் திருசியமாகின்றது. அஹம் விருத்தியால், இரண்டும் சம்பந்தம். அதன் நாசத்தில், ஆத்மாவிற்கு அத்வைதம் (சித்திக்கின்றது).

ஈண்டுச் சிலர், பாதொரு இவ் வந்வய வியதிரேகங்களால் அநாத்மரூபமாக அஹங்காரம் வாக்கியார்த்தப் பிரதிபத்தியின்பொருட்டுநீக்கப்பட்டது, அவ்விது விபரீதார்த்த முடையதே; எதனால் நான் பிரஹ்மம் என்பது பிரஹ்ம அஹம் பதார்த்தங்கட்குச் சாமானாதிகரண்யம் கேட்கப்படுதலின், அநாத்மார்த்தத்தோடு சாமானாதிகரண்யம் அடையும், பிரத்தியக் காத்மாவினிடத்து அதன் விருத்தி கூறவேண்டும் என்று சங்கிக்கின்றனர். அது கூறப்படுகின்றது; பிரசித்த லக்ஷணை குணவிருத்தி.—

54. சுழுப்தியி னின்றும் எழுந்தவனும் நான் அறியா திருந்தேன் என்று கூறுகின்றான். அதனால், இரும்பு சுடுகின்றது என்னும் பிரதீதி போன்று (அஹம் சப்தத்திற்குமுக்கியார்த்தத்தில்வேறுபிரமாணவிரோத மிருத்தலின், முக்கியார்த்த சம்பந்தி) பரமாத்மாவின் லக்ஷணம் (லக்ஷணா விருத்தியால் கூறப்படுகின்றது).

55. பிரத்தியக்காகலானும், அதிசூக்ஷ்மமாகலானும், ஆத்ம திருஷ்டி அநுசீலனத்தானும் கடாதி விஷய விருத்தியை விட்டு அஹம் விருத்தியால் அநந்நியங் கூறப்படுகின்றது.



56. (அஹங்கார மிருப்பின், அஃது) ஆத்மாவோடு அவிநாபாவம் அடையும்; அல்லாக்கால்? லயத்தை அடையும்; வேறு (மூன்றாவது) பக்ஷ மின்று. இதனால் (ஆத்மா) அஹம் சப்தத்தால் கூறப்படுகின்றது.

எவ்வித வஸ்து லக்ஷ்யம்.—

57. நாமாதிகளி னின்றும் அந்நியம் பூமா; (அது) நிஷ்களம், அகாரகம், அக்கிரியம். அதுவே ஆத்மவான்கட்கும் ஆத்மா; அதுவே நமக்கு ஸ்வயம் சித்தம்.

அஞ்ஞானத்தி னின்று முண்டாய புத்தியாதி கர்த்திருத்துவ உபாதியை யுடைய ஆத்மாவைக் கிரகித்தே, அந்வய வியதிரேகங்களால் நான் சுகி துக்கி என்னும் அஹங்காராதிக்கு அநாத்ம தர்மத்தன்மை கூறப்பட்டது; கேவல ஆத்மா அங்கீகரிக்கின், அசக்கியமாகலானும், பலமின்மையானும். இப்பொழுது அவித்தியா பரிகற்பித சாக்ஷித்தன்மையை அங்கீகரித்துக் கர்த்திருத்துவாதி சமஸ்த பரிணாமப் பிரதிஷேதத்தின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

58. அவ்விந்த லோப மின்றிய முக்கிய தர்சன முடைய ஆத்மா, சர்வ புத்தியின் நிருத்தமாய ஜடத் தன்மையைப் பாரா திருப்பினும், பார்க்கின்றது. (தான்) ஸ்திரம், அஸ்திரத்தைப் (பார்க்கின்றது).

அற்றேல், சர்வ சித்தாந்தங்கட்கும் தன் திருஷ்டியபேக்ஷையாற் பொருந்துதலின், பரஸ்பர திருஷ்டியபேக்ஷையாலும் சித்தி யின்மையின், ஓரிடத்தும் விஸ்வாசம் பார்ப்ப தின்று; சர்வ தார்க்கிகர்களாலும், தூஷிக்கப்படாமலும், சமர்த்தனஞ் செய்யப்படாமலும் இருப்பதின்று. இதனால் சர்வ தார்க்கிக உபத்திரவ நிவர்த்தி

க்கு மார்க்கம் சம்பவிப்ப தின்று (எனின்), கூறப்படுகின்றது. அநுபவ மாத்திர சரணமாகலின், சர்வ தார்க்கிக பிரஸ்தானங்கட்கு ஸ்வ கபோலக் கற்பிதத்தாற் சம்பாவிக்க. அது கூறப்படுகின்றது.

59. இப் பிரஸ்னத்தை உத்தேசித்துத் தர்க்க ஜ்வர அதிசயப் பிரியர்கள், அமுகமாகலின் அமுகமாகலின் என்னும் ஹேது சமூகங்களால் பரஸ்பரம் மோஹஞ் செய்கின்றனர்.

இவ்விடத்தும் சங்கிக்கின்றனர். அநுபவ ஆத்மாவிற்கும் விகாரம் அங்கீகரித்தவிடத்தும், அங்கீகரியா விடத்தும் தோஷமே. எதனால்? கூறப்படுகின்றது.—

60. வர்ஷ ஆதபங்களால் ஆகாயத்திற் கென்? அவ்விரண்டன் பலம் சர்மத்திடத்தே. சர்ம உவமையாயின், அஃது அநித்தியமாம், ஆகாச துல்லியமாயின், அப்பிரமாத்திருத் தன்மையாம்.

61. (கடாதி விஷய) ஞான உத்பத்தியில் ஆத்மா விகாரமாயின், அநித்தியத்தன்மை வரும்; ஆத்மா அவிகாரமே யாயின், பிரமாத்திருத்தன்மை பொருத்தமின்று.

இதற்குப் பரிஹாரம்.—

62. புகை உபரச் செல்லுமிடத்து, ஆகாசம் பேத மடைகின்றதா? அல்லது, பேத மடைவதின்று? பேத மடைவ தின்றாயின், உயரச் செல்வதின்று; பேத மடைகின்ற தெனின், இதற்குப் பேதஞ் செய்வது யாது?



என்னு மிதன் பிரதிபத்தியின் பொருட்டுக் கூறப்படுகின்றது.—

63. விகார மின்றிய ஆத்மாவிற்கு அஹம் புத்திப் பிராந்தியால் போத்திருத்தன்மை கூடும்; ஓடம் ஓடும் (நிமித்த) ப்ராந்தியால், தீரத்திலுள்ள ஸ்திரமான விருக்ஷங்களினிடத்து ஓடுந்தன்மை கற்பிப்பது போன்று.



உரைத்த அர்த்த ஆவிஷ் காரணத்தின் பொருட்டு வேறு திருஷ்டாந்தக் கிரஹணம்.—

64. எங்ஙனம் ஜாத்தியமணியின் காந்தி, கடாதிகளினுடைய சந்நிதி அசந்நிதானங்களில், சுத்தமாயும், நிச்சலமாயும், பாஸ்வரமாயும், அவிக்கிரியமாயுமிருக்கின்றது.

இத்திருஷ்டாந்தத்தின்கண் இவ் வம்சம் தாத்பர்ய மென்று அறிவுறுத்தற்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

65. எவ் வவஸ்தையிலுள்ள காந்தி, விளக்குகின்றது என்று கூறப்படுகின்றது, மீண்டும் அவ் வவஸ்தையிலுள்ள அதுவே கடாதிகளினுடைய அசந்நிதானத்தில் விளக்க வில்லை என்று கூறப்படுகின்றது.

அவ்விடத்தும்

66. அதுபோன்று பரமாத்மா பிரகாசமாயினும், புத்தி விருத்திகளின் சந்நிதி அசந்நிதானங்களில், அவிக்கிரியமே, சர்வ புத்தியை விளக்குகின்றது.

67. இவ் வாத்மாவிற்குத் தன்னிடத்துப் பிரகாசக் கிரியை ஒன்று மின்று; இவ் வாத்மாவிற்கு அந்தக்

கிரியை உபசாரத்தால் பிரகாஶ்யத்தின் சந்நிதியா லுண்டாகின்றது.

இது சாங்கியமத சித்தாந்த மென்று சங்கை செய்யற்க. எதனல்.—

68. எங்ஙனம் விசுத்தமான ஆகாசத்தினிடத்து மேக மண்டலம் சஹசமாகவே உத்பத்தியாகி லயத்தை யடைகின்றது, அங்ஙனம் ஆத்மாவினிடத்து ஈண்டுச் சர்வ ஜகத்தும் (உண்டாகி லயத்தை யடைகின்றன).

ஆகலின், இது கூடஸ்தம்; (இதனை) த்வைதம் அற்பமும் ஸ்பரிசிப்பதின்று. எதனல்.—

69. சப்தாதி ஆகாரமாய் விளங்கி க்ஷணத்தில் நாச மடையும் புத்திகளில் நித்தியமாயும் ஒரேகாலத்தில் அறிவதாயு முள்ள ஆத்மா வொன்றே சைதந்ய ரூபத்தால் அஹோராத்திரம் வியாபித் திருத்தல் போன்று(பார்க்கப்படுதலின் துவைத சம்பந்த மின்று).

இங்ஙனமாயின், புத்திக்குப் பரிணமித் தன்மை பொருந்தும்.—

70. எதனல் பூத பவிஷ்ய வர்த்தமான சர்வ கோசரமான விஷயங்களை ஆத்மா போன்று ஒரே காலத்தில் அறிய வில்லை. அதனல் இப்புத்தி பரிணமியாகும்.

அதனனும், இது சித்தம்.

71. நிர்மல அவிக்கிரிய ஸ்வப்பிரகாச ஆத்மா பார்க்கும் புத்தியைக் குறித்துப் பார்ப்ப தின்றியதாயும், கேட்பதைக் குறித்துக் கேட்ப தின்றியதாயும், இச்சிப்பதைக் குறித்து இச்சை யின்றியதாயும்,



72. ஆத்மா துவேஷிப்பதைக் குறித்துத் துவேஷ மின்றியதாயும், கோபிப்பதைக் குறித்துக் கோப மின்றியதாயும், துக்கியைக் குறித்துத் துக்க மின்றியதாயும், சுக முடையதைக் குறித்துச் சுக மின்றியதாயும்,

73. மோஹ முடையதைக் குறித்து மோஹ மின்றியதாயும், கற்பிப்பதைக் குறித்துக் கற்பனை யின்றியதாயும், ஸ்மரணஞ் செய்வதைக் குறித்து ஸ்மரணஞ் செய்வ தின்றியதாயும், நித்திரை செய்வதைக் குறித்து நித்திரை செய்வ தின்றியதாயும்.

74. சர்வாகாரத்தைக் குறித்து நிராகாரமாயும், ஸ்வார்த்த மின்றிய புத்திராதிகளைக் குறித்து அபரிஸ்பந்த ஸ்வார்த்தமாயும், முக்காலத்தி லுள்ளதைக் குறித்து முக்கால மின்றியதாயும், க்ஷணத்தில் நாச மடைவதைக் குறித்துக் கூடஸ்தமாயும்,

75. அத்வய ஆத்மா சாபேக்ஷ யுடையதைக் குறித்து நிரபேக்ஷமாயும், வெளியைக் குறித்துப் பிரத்தியக்காயும், சாவதியைக் குறித்து நிரவதியாயும், சர்வ தேஹங்களிலும் பார்க்கப்படுகின்றது.

இக்காரணத்தானும் இவ்வர்த்தத்தை நிச்சயிக்க.—

76. ஆத்மா துக்கியாகுமாயின், துக்கிக்குச் சாக்ஷி யாதாகின்றது? எங்ஙனம் துக்கிக்குச் சாக்ஷித் தன்மை அயுக்தம், அங்ஙனமே சாக்ஷிக்கும் துக்கித் தன்மை அயுக்தமாம்.

பூர்வத்தின் வியாக்கியானர்த்தமே கூறப்படுகின்றது.—

77. துக்கித்தன்மை யின்றி விகாரித்தன்மை யின்று; விகாரிக்குச் சாக்ஷித்தன்மை யாங்ஙனம்? (ஆத்மா) விகாரமுடைய ஆயிரம் புத்திக்குச் சாக்ஷி. இதனுல் நான் அவிக்கிரியன்.

இங்ஙனம் சர்வமும் வியபிசார மடையுமிடத்து ஆத்ம வஸ்துவே வியபிசார மின்றிய தென்று அநுபவத்தால் வியவஸ்தாபித்தற்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

78. பிரமாண, பிரமாணசதிருச விருத்திகளில் (வியபிசாரம் வருமிடத்து) இவற்றின் அநுயாயியாய சாக்ஷிரூப வெனக்கு நாச மின்று. யாது என்னினின்றும் அந்நிய ரூபமாக விளங்குகின்றது; அது க்ஷணத்தில் நாச மடைவதேயாம்.

79. கடத்தின் உத்பத்தி ஸ்திதி லயங்களில் எங்ஙனம் ஆகாயத்திற்கு உத்பத்தி ஸ்திதி லயங்களிலவோ, அங்ஙனமே புத்தியின் (உத்பத்தி ஸ்திதி லயங்களில்) எனக்கு மின்று.

சுக துக்க அவற்றின் சம்பந்தங்களும் பிரத்தியக்ஷமாகலின், இது சிரத்தை மாத்திரத்தால் கிரகிக்கத் தக்க தன்று.—

80. எங்ஙனம் தண்டியைத் தண்டத்தோடு (சம்பந்தமில்லாத) திருஷ்டா பார்க்கின்ருன், அங்ஙனம் சுக துக்காதி சம்பந்த முடைய புத்தியை (அவற்ருேடு) சம்பந்த மின்றிய சாக்ஷி (பார்க்கின்றது).

இவ் வேதுவானும் புத்திக்குப் பரிணமித் தன்மை பொருந்தும்.—

81. இப் புத்தி (ஆந்தர) சுக (பாஹ்ய) கடாதிகளோடு சம்பந்திக்கின்றது, அவற்றை அறிகின்றது; அப்பொழுதே அந்நியத்தை அறிவதின்று. இதனுல் புத்தி விகாரியாம்.

இப் புத்திக்கு க்ஷணத்தில் நாச மடையுந் தன்மை சித்தித்தலின், ஸ்வயமே ஆத்மா சாக்ஷியாகின்றது. கூடஸ்த ஞாந மின்றிப் புத்திக்கே ஆவிர்ப்பாவ திரோபாவாதி சித்தி யின்று.—

82. நித்தியுமாயும் ஒரே காலத்தில் அறிவதாயுமுள்ள ஆத்மாவால் வியாபிக்கப்பட்டே பரிணமி ரூப புத்தியின் ஸ்வரூபம் ஷட்பாவ விகாரத்தை யடைகின்றது. எங்ஙனம் ஆகாசத்தால் (வியாபிக்கப் பட்டே) அங்குரம் (உத்பத்தியாகின்றது.)

சத்ரூப ஆத்மாவிற்கும் அவிகாரித்தன்மையில் யுக்தி (கூறப்படுகின்றது).—

83. ஸ்மிருதி ஸ்வப்ந சாக்கிரங்களில் புத்தியின் ஒரு பிரத்தியயமும் ஆத்மாவால் வியாபிக்கப் படாமலிருப்பதில்லை. இதனுல் ஸ்வயம் சைதந்ய ரூப ஆத்மா நித்தியமும் அவிகாரியாயு மிருக்கின்றது.

இங்ஙனம் அந்நிய ரங்கீகரித்த பிரக்கிரியையின் பிரஸ்தானத்தால் சர்வ விகாரமுமின்றிய ஏகாத்மத்தன்மை யுக்திகளால் கூறப்பட்டது; இப்பொழுது சுருதி சம்பந்தப் பிரக்கிரியையை அவலம்பித்துக் கூறப்படுகின்றது.—

84. அல்லது, சைதந்நிய ரூப இவ்வாத்மாவிற்குப் பரிணம அங்கீகார மிருக்கட்டும். (ஆயினும்), கூடஸ்த ரூபமாகலின், இது தண்டத்தின் கோணற்றன்மை ஜலத்தில் (தோன்றுவது) போன்று மித்தையே யாம்.

85. இங்ஙனம் (ஷட்) பாவ விகாரங்கள் ஆறும் நிஷேதஞ் செய்யப்படின், ஆத்மாவினிடத்து ஈண்டு ஒரு தோஷமும் தார்க்கிக சுவானங்களால் அடைவித்தற்குச் சமர்த்த மின்று.

பிரகிருதத்தையே கொண்டு புத்திக்குப் பரிணாமித்தன்மையும், ஆத்மாவிற்கு அபரிணாமித்தன்மையும், யுக்திகளாற் கூறப்படுகின்றன.—

86. விஷய உன்முகமான புத்திகள் விஷயந்தோறும் பேத மடைகின்றன. அது போன்று சைதந்நியம் பேத மடைவ தின்று; ஏதனால், அச் சர்வ புத்தியையும் சித்து ப்ரகாசித்தலின்.

(இது) தன் சம்பந்தார்த்தத்தின் கண்ணே (கூறப்படுகின்றது,).—

87. (புத்தி) சிலவற்றை அறிவது; இதனானே சர்வத்தையும் அறிவ தன்று. புத்தி பரிணாம மன்றெனின், அஃது ஆத்மா போன்று சர்வத்தையும் அறிவதாகும்.

இதனால் ஆத்மா ஒன்றாகலின்.—

88. எது சண்டாள புத்தியை அறிவது; அதுவே பிரஹ்ம புத்தியை அறிவது. அவ்விரண்டின்கண்ணும் ஒன்றே ஜோதி; விஷயமாய பாஸ்ய பேதத்தால் அநேகம் போன்று (தோற்றுகின்றது.)

ஏதனால்.—

89. இவற்றிற்கு ஏதனால் அவஸ்தா தேச காலாதி பேத மின்று, அதனால் ஜகத் புத்தியின் ஸ்வரூபத்தைச் சதா ஒரே ஜோதி பார்க்கின்றது.



சர்வ தேஹத்தின்கண்ணும் ஆத்மா வொன்றாகுமிடத்து, பரமார்த்த தத்துவத்தை அறிந்த புருஷனுக்கும், அறியப்படாத தேஹ சம்பந்தத்தாற் சர்வ துக்க மெனின், அற்றன்று.—

90. எவ் வாத்மாவினிடத்து ஞானத்திற்குப் பூர்வம் தன்னிடத்துள்ளதாக விளங்கப்பட்ட துக்கித்தன்மையும் (நான் பிரஹ்ம மென்னும்) ஞானத்தின் பின்னர் அசத்தாய்விட்டது; (ஆகலின், பூர்வம்) அந்நிய தேஹத்தில் (இருப்பதென்று) உண்டான (துக்கித்தன்மை இப்பொழுது) எங்ஙனம் நமக்குண்டாம்? (உண்டாகாது).

இது தன் மனோ கற்பனை யெனக் கிரக்கிக்கற்க; ஏதனால், சுருதியைக் கொண்டிருத்தலின்.—

91. அபரிணாமியாய ஆத்மாவிற்கு, அந்தக்கரண விருத்தி, சப்தாதி ஆகாரங்களை விளக்குவதாயும், கொள்ளுதற் றள்ளுதற் றர்ம முடையதாயும் இருந்து பாஸ்ய (திருசிய) மாகின்றது என்று சுருதி கூறுகின்றது.

இச்சுருதி யாது?—

92. புத்தியால் திருஷ்டியின் திருஷ்டாவாய ஆத்மா பார்க்கப்படுவ தில்லை. அரே! புத்தியின் பதியாய விஞ்ஞாதாவை யாரால் அறிதல் முடியும்?

ஏதனால் இவ்வர்த்தம் சர்வப் பிரமாண உபபந்நம், அதனால் இதனினின்றும் வேறு விதமாகக் கூறுபவர்கள் பிறவிக் குருடர்

போன்று சோக முடையவர்க ளெனக் கூறப் படுகின்றனர்.—

93. பிறவிக் குருடரின் யானைத் திருஷ்டி போன்று, குயுத்திகளால் அவ்விவ் அத்வய நிர்விகாரமாய பிரஹ்மம் வேறு பிரகாரமாகக் கற்பிக்கப்படுகின்றது.

பிரமாண உபபந்ந அர்த்தத்தை அசம்பவஞ் செய்தலின், அவர்கட்குச் சோக முடையதாந்தன்மை சித்திக்கின்ற தென்னு மவ்விது கூறப்படுகின்றது.—

94. எவ்வெவ் விசேஷணத்தை பார்க்கின்றோம், அதுவது ஆத்மாவிற்கு அன்று; அந்நுவய மின்மையின், ஆகாசத்திற்குக் கடாதி போன்று. அதனல் ஆத்மா நிர்விசேஷணமா யிருக்கின்றது.

இதனனும் ஆத்மாவிற்குப் பேத சம்ஸ்பரிசமின்று; பேதம் மித்தையா ஸ்வபாவ மாகலின். இதனற் கூறப்படுகின்றது.—

95. அறிவுரூப ஆத்மாவி னின்றும் அஹங்காரத்தோடு இவ்விஸ்வம் எதனல் கடம் போன்று உத்பத்தியாய் நாச மடைகின்றது, அதனல் அது கேசாதி போன்று (பாத்தியமாம்.)

விவேகக் கிரகணம் யாது அதுவே சர்வ அநுமான வியாபாரத்திற்கும் பலம். அது கூறப்படுகின்றது.—

96. புத்திக்கு அநாத்ம தர்மத்தன்மை அநுமானத்தால் சித்திக்கின்றது. ஆத்மாவிற்கு அத்விதீயத் தன்மையும் ஆத்மத்தன்மையானே சித்திக்கின்றது.



† கிருகித்திரு கிரஹண கிராஹ்ய கிருஹீதிஅவற்றின் பலரூபமாய பிரஹ்மா முதற் றம்பபரியந்த இச்சம்சாரம் அந்நுவய வியதிரேகங்களால் அநாத்ம ரூபமாக நிர்மால்யம் போன்று நீக்கப்பட்டது. அங்ஙனமாயினும், சாங்கியர்கட்குப் போன்று இது, ஸ்வத சித்த ஆத்மாவினின்றும் அந்நிய அநாத்மாவாய பிரகிருதி பதார்த்தத்தை ஆசிரயிப்பதே யின்று; பின்னையோ, ஸ்வத சித்தமாயும் உத்பத்தி லய மின்றிக் கூடஸ்தமாயு முள்ள ஆத்மாவின் பிரஞ்ஞான மாத்திர சரீரத்தாற் பிரதிபிம்பித்த, அவிசாரத்தாற் சித்தித்த ஆத்மாவின் அறியாமையின் ஆசிரயமே; அதற்கு அது உபாதாந மாகலின் என்னும் இவ்வர்த்தத்தைக் கூறு மிச்சை யுடையவர் கூறுகின்றார்.—

97. ஞாநத்தை விட்டு அர்த்தங்க ளிருப்பன வல. அவைக ளின்றியும் ஞாந மிருக்கின்றது. இங்ஙனம் அநுமானத்தால் புத்தியினின்றும் ஜோதியைப் பின்னமாக விவேகஞ் செய்க.

எதனல் பிரமாணப் பிரமேய வியவஹாரம், ஆத்மாவை அறியாமையின் ஆசிரயமே, அதனல் ஆத்மாவிற்கு அப்பிரமேயத்தன்மை சித்திக்கின்றது. காரியம் தன் காரணத்தை அதிக்கிரமித்து அகாரகமாய அந்நிய விடத்து ஸ்திதி பெறுவதே யின்று என்னு மிதனல் கூறப்படுகின்றது.—

98. இப் புத்தி தேஹ கடாதிகள் வியவதான மடைவனவே. ஆத்மாவிற்கு ஆத்மத்தன்மையால் அற்பமும் எதனல் வியவதானம்? (வியவதான மின்றாம்.)

---

† பிரமாதா-பிரமாணம்-பிரமேயம்-விஷயஞானம்.

ஸ்வயம் அஸ்புரணரூபமாகலின். அஸ் புரணரூபமும் மோஹ மாத்திர உபாதாந மாகலின்.—

99. பிரமாண மின்றி இப் புத்தியாதிகளின் சித் தித்தன்மை யின்று. அநுபூதிபலார்த்தமாகலின் ஆத் மஞ்ஞன் என்ன அபேக்ஷிக்கின்றான்?

கூறும் இதரேதராத்தியாச சித்தியின் பொருட்டுக் கூறிய வியதிரேக அநுவாதம்.—

100. கடரூப அர்த்தத்தினின்றும் கடபுத்தியின் திருஷ்டா எங்ஙனம் பின்னமோ, அங்ஙனமே அஹங் காரமாய விஷயத்தினின்றும் அஹம் புத்தியின் (திருஷ் டாவாய) துக்கித்தும் சைதந்நியத்திற்கும் (பேதம்.)

இங்ஙனம் ஸ்வத சித்த பரசித்த இந்த ஆத்மாநாத்மாக்கட்கு லௌகிக ரஜ்ஜு சர்ப்ப அத்தியாரோபம் போன்று இதரேதர அத்தியாரோபம் அவித்தையின் ஆசிரயமே என்னு மிது கூறப்படுகின்றது.—

101. எங்ஙனம் மேகஞ் செல்வதை மோஹத்தால் சந்திரனிடத்தில் நிச்சயஞ் செய்யப்படுகின்றது, அது போன்று புத்தியின் தர்மமாய சுகித்தன்மை முதலியன ஆத்மாவினிடத்து அங்கீகரிக்கப்படுகின்றன.

102. தீயபுத்தி யுடையவர்கள் அக்கினியின் தக் திருத்தன்மையை எங்ஙனம் இரும்புக்கு அங்கீகரிக் கின்றனர், அது போன்று ஆத்மாவினது சேதநத்தன் மையை மோஹத்தால் கர்த்தாவினிடத்து அங்கீகரிக் கின்றனர்.



இவ் வாத்மாநாத்ம விபாக மெல்லாம் பிரத்திய க்ஷாதி பிரமாண மார்க்கத்திற் பதிந்து அவித்தையின் ஆசிரயமே; பரமாத்மாவின் ஆசிரய மன்று. சர்வ அநர் த்த காரண இவ்வவித்தை எதனுல் நிவர்த்தி எனின், அது கூறப்படுகின்றது.—

103. அநாதிப் பிராந்தி அவித்தையாம்; அது துக் கத்தின் சமூக விசித்திர சம்சார விருக்ஷத்திற்குக் கார ணமாம்; அதன் பாதம் தத்துவ தர்சனத்தான்.

"அதன் பாதம் தத்துவ தரிசனத்தான்" என்றது, எங்ஙனம் பொருந்துகின்ற தெ னின், இதனுற் கூறப்படுகின்றது; கோபால அவிபால பண்டித பரியந்தம் இதுவே பிர சித்தம்.—

104. பிராந்தியால் உண்டான ஞாநம் பிரமையா லுண்டான ஞானத்தால் பாதிக்கப்படுகின்றது. சர்ப்ப ரஜ்ஜுவாதி பாதம் போன்று தேஹாதி ஆத்ம புத்தி யின் பாதம்.

ஆத்மா, லௌகிகப் பிரமேய வைலக்ஷண்ய மாகலின், ஈண்டு அறியப்படாததின் அறிவு பிரமாண பல மன்று.—

105. அவித்தையின் நாசமாத்திரமே பல மென்று உபசாரமாகக் கூறப்படுகின்றது. அஞ்ஞாத ஞாபகத் தன்மை நியாய மன்று; ஆத்மா ஏகரூப மாகலின்.

எதனுல் பிரமாத்திராதிகள் ஆத்மாஞ் ஞாந மாத்திர உபாதாநங்கள், அதனுல்.—

106. திருஷ்டா தர்சன திருசியங்கள் தமது சத்தையை அறிவன வல்ல; பரஸ் பரம் (அறிவதும்)

அன்று. இதனுல் இவைகளை அறியுந்தன்மை, வேறு சாதனமாம்.

திருஷ்டிராதியின் அசாதாரண ரூப ஞாபகத்தின் பொருட்டுப் புகலப்படுகின்றது.

107. பாஹ்ய ஆகார முடையது கிராஹ்யம். நிச்சயாதி யுடைமை கிரஹணம். (இவற்றில்) அந்வயி அஹம் என அறிக. சதா நிச்சயமாய சாக்ஷி ஆத்மா.

சர்வ காரக கிரியா பல விபாக ரூப சம்சார சூநியம் ஆத்மாவாம்; ஆத்மா காரக கிரியா பல விபாக சாக்ஷியாகலின். அது கூறப்படுகின்றது.—

108. கிராஹக கிரஹண கிராஹ்ய விபாகத்தின்கண் எது அவிபாகமா யிருக்கின்றது, (எது) விடுதல் கொள்ளுதல்களின் சாக்ஷி, அது விடுதல் கொள்ளுதலின்றிய தாகின்றது.

கிராஹகாதியினிடத்தே, கிராஹகாதியின் பாவாபாவ விபாக சித்தி எதனுல் இன்றெனின், அது கூறப்படுகின்றது.—

109. (கிரஹணுதிகளின் அந்நியதம) நஷ்டமானது தன் சாதநத்தையும் தன் நாசத்தையும் தான் அறிவ தின்று; (தான்) இன்மையின். இதனுனே அந்நியவற்றினது (நாசத்தை அறிவது) இன்று. அதனுல் இது அந்நியத்தைச் சாக்ஷியாக வுடையதே.

கிராஹகாதிக்கு அந்நிய சாக்ஷி பூர்வகத்தன்மை சித்தித்தலின், தன் சாக்ஷிக்கும் அந்நியசாக்ஷி பூர்வகம் வருமாகலின் அநவஸ்தை எனின், அற்றன்று; சாக்ஷி அந்நிய ஹேதுவை அபேக்ஷியாமையின்; இதனுல் கூறப்படுகின்றது.—



110. அவிக்கிரிய ஆத்மா, புத்தி போன்று அந்நியத்தால் சித்தியை அபேக்ஷிப்ப தின்று; மற்றவற்றுல், நிரபேக்ஷத்தை (ஆத்மாவை) அபேக்ஷித்தே ஸ்வயம் சித்திக்கின்றது.

எதனுல் கிராஹகாதிகளின்கண் ஆத்மத்தன்மை அவித்தையின் நிமித்தமே, அதனுல்.—

111. அந்நுவய வியதிரேகங்களால் ஸ்வயம் அநாத்மாவினின்றும் பிரிந்து ஜகத்தின் உத்பத்தி ஸ்திதி நாசங்களில் எது விகார மின்றி ஞாநரூபத்தானே இருக்கின்றது, அதை (நானுக) இருக்கின்றேனென அறிக; புத்திராதி நஶ்வரத்தை அன்று.

அநாத்மாவாய த்வைத இந்திர ஜாலத்திற்கு, ஸ்வயம் சித்த ஆத்ம சைதந்நியத்திற் பிரதிபிம்பித்த அவிசார சித்தி யுடைய ஆத்மாவின் அறியாமையினின்று முண்டான இதரேதர ஸ்வபாவ அபேக்ஷ சித்தி யாகலானும், ஸ்வயம் சித்தி யின்மையானும்.—

112. (துவைத இந்திர ஜாலமாய) தனக்கு ஸ்வயமே (தன்னுனே) நானுத்தன்மை சித்திப்ப தின்று; ஞானரூபத்தானும் அன்று. எதனுல் இருவித ரூபங்களானு மன்று, அதனுல் துவைதம் பாதிக்கப்படுதலின், அத்வைதம் சித்திக்கின்றது.

புகன்ற பொருளின் ஞாநதிடத்தின்பொருட்டுச் சுருதி உதாஹரண உபந்நியாஸம்.—

113. நித்திய அறிவு ரூபமாகலின் ஆத்மாவிற்குக் காரகாதி (அபேக்ஷை) இன்று. "அஸ்தூலம் இது அன்று இது அன்று" என்றும், "உத்பத்தியாவதின்று" என்றும் சுருதிகள் புகல்கின்றன.

ஆத்மாவை அறியாமை மாத்திர உபாதாந முடைய கிராஹகாதி இச்சர்வ துவைதப் பிரபஞ்சத்திற்கும் ஸ்வயம் சித்தித்தற்கு சமர்த்த மன்றுகலின், ஆத்மாவாற் சித்தியும் கொள்ளாமையின்.—

114. ஆத்மாவால், புத்தி தேஹ கடாதிகள் நிவர்த்திக்கப்படுமாயின், அவை பரமார்த்தமாக அபாவ சமாநமேயாம் என்று அறியத்தக்கன.

எக்காரணத்தால் நியாயபலத்தால் இங்ங னம் நிச்சயமாகத் தோன்றுகின்றது. எத ஞல்.—

115. ஸ்வத சித்தமாயும், அவிக்கிரியமாயும், நித் தியமாயு முள்ள (ஆத்மாவின்) சம்வித்தை ஆசிரயித்துப் புத்தியின் ஞானங்கள் சித்திக்கின்றன. அவற்றை ஆசிரயித்துக் கடாதிகள் (அபரோக்ஷமாக விளங்கு கின்றன).

எதனுல் எவ்வித யுக்தியினுனும் ஆத்மாவிற்குக் காரகத்தன்மையும், கிரியாத்தன்மையும், பலத்தன்மை யும் பொருந்துவ தில்லை, அதனுல் ஆத்ம வஸ்துவின் யதார்த்தத்தை அறியாமை மாத்திர உபாதாநமாகலின், ஆகாசத்தின்கண் தூசி, புகை, உமி, நீஹார, நீலாதி அத்தியாசம் போன்று உரைத்த ஆத்மாவினிடத்துக் கிரியா காரக பல ரூப இச்சர்வ சம்சாரம் அஹம், மமத் துவ யத்ந இச்சாதி மித்தியாத்தியாசமே என்று சித்திக்கின்றது. இவ்வர்த்தத்தைக் கூறுகின்றுர்.—

116. அஹங்காரத்தின் மித்தியா அபவாதத் தால் துக்கியான ஆத்மா, அதனை அறியும் இச்சையால்



சுருதியை அடைந்தது. அச்சுருதியால் "இது அன்று" என்று கூறப்பட்டது. (அதனுல்) கேவலமாய் இருந்தது.

அவ்விம் முமுக்ஷுவிற்கு சுருதியின் வச நத்தால் ஸ்வப்பந நிமித்தம் நீக்கப்பட்ட நித் திரை யுடைய புருஷனுக்குப் போன்று, இந்த நிச்சிதார்த்தப் பிரமை உண்டாகின்றது.—

117. ஆத்மாவினிடத்து அஹங்காரம் இன்று; மமகாரம் இன்று; ஆத்மா வாகலின். சதா அநாத்மா வின்றியதே. சூரியனிடத்துத் தமம் போன்று என் னிடத்து அத்தியாசமும் நிவர்த்தியும் (முக்காலத்து மின்று).

இங்ஙனம் அறிவு ரூபமாய ஆத்மாவை அடைந்தவன் கூறுகின்றுன்.—

118. "எவ்விடத்து இவனுக்கு" என்று ஆடம் பரத்தோடு சர்வ துவைதத்தை நிஷேதிப்பதாயும், சம் சாரத்தை நிவர்த்திப்பதாயு முள்ள சுருதியையும் கேட்க வில்லையா ?

119. "இதி ஓம்" என அறிந்த ஆத்மா, நிஷ்கள மாயும், அகாரகமாயும், அக்கிரியமாயும், விரக்தன் போ ன்று புத்தியாதியி னின்றும் (வைராக்கியத்தை யடை ந்து) தன் மகிமைப்பி னிடத்தே யிருக்கின்றது.

இரண்டாம் அத்யாயம் சமாப்தம்.



ஸ்ரீமத் குருப்யோ நமோ நம:

# மூன்றும் அத்யாயம்.

பிரமிதி, பிரமாண, பிரமேய, பிரமாத்திரு லக்ஷணப் பிரஹ்மாதி ஸ்தம்ப பரியந்தமான இச் சர்வமும் மித்தியா அத்தியாசமே என்று அநேக உபபத்திகளால் கூறப்பட்டது. ஆத்மாவும் ஜன்மாதி ஷட்பாவ விகார மின்றிய கூடஸ்த போதமே யென்று ஸ்புடஞ் செய்யப் பட்டது. மித்தியாத்தியாச கூடஸ்த ஆத்மாவாய அவற்றிற்கும் அஞ்ஞாந மின்றிச் சம்பந்த மின்று. "இவளே! ருக், அக்நி, சாமம்" என்பது போன்று, அந்நியவிடத்துச் சோதனையாற் பிராப்த மாகலின். அந்த அஞ்ஞாநமும் ஸ்வாத்ம மாத்திர நிமித்தம் பொருந்தாமையின், (அந்நியமாய) ஒன்றற்கு ஒரு விஷயத்தின் கண் ணுண்டாகின்ற தென் றங்கீகரிக்க. வேதாந்த சாஸ்த்திரத்தில் ஆத்மாவும் அநாத்மாவும் என்று இரண்டு பதார்த்தங்கள் நிச்சயஞ் செய்யப்பட்டிருக்கின்றன. அவற்றுள், அநாத்மாவிற்கு அஞ்ஞாநத்தோடு சம்பந்த மின்று; அதற்கு ஸ்வரூபமே அஞ்ஞானமாம்; ஸ்வயம் அஞ்ஞாநத்திற்கு அஞ்ஞாநம் பொருத்த மன்று. பொருந்தினும், அஞ்ஞாந ஸ்வபாவத்தின்கண் அஞ்ஞாநம் என்ன அதிசயத்தை உண்டாக்கும்? அவ்விடத்து ஞாநப் பிராப்தி யின்று; எதனல் அதன் பிரதிஷேத ரூபம் அஞ்ஞாந மாகின்றது, அநாத்மாவும் அஞ்ஞாநத்தினின்று உத்பத்தியானமையின், பூர்வஞ் சித்தித்த அஞ்ஞாநத்தினின்றும் ஸ்வரூப லாப மடைந்த ஆஸ்ரயத்தின் ஆஸ்ரயி யாகாது. அஞ்ஞானத்தின் அபேக்ஷை யின்றிய அநாத்மாவிற்கும் நிஸ்வபாவமாகலின், இவ்வேதுக்களானே அநாத்ம விஷயம் அஞ்ஞாந மன்றெனக் கிரகிக்க.



இங்ஙனம் அநாத்மாவிற்கு அஞ்ஞாநித்தன்மை யின்று; அநாத்ம விஷயமும் அஞ்ஞாந மன்று; பரிசேஷத்தால் ஆத்மாவிற்கே அஞ்ஞாந மிருக்க; ஆத்மாவிற்கு அஞ்ஞன யிருக்கின்றேன் என்று அநுபவம் பார்க்கப் படுதலின்; "ஹே பகவன்! அந்த நான் மந்திரவித்தாயே யிருக்கின்றேன்; ஆத்மவித் தன்று." என்னுஞ் சுருதியால். ஆத்மாவிற்கு அஞ்ஞாந ஸ்வரூபத் தன்மை யின்று; அதற்கு சைதந்நியமாத்திர ஸ்வபாவமாகலின். (அஞ்ஞாந ஜன்ய) அதிசயமும் பொருந்துகின்றது; ஞாந லோபமும், ஞாநப் பிராப்தியும் பொருந்துகின்றன; அது ஞாநகாரியாகலின். அஞ்ஞாந காரியத்தன்மை யின்று; கூடஸ்த ஆத்ம ஸ்வபாவமாகலின். அஞ்ஞாந அபேக்ஷை யின்றிய ஆத்மாவிற்கு ஸ்வயமே ஸ்வரூபஞ் சித்தித்தலின், ஆத்மாவிற்கே அஞ்ஞத்தன்மை பொருந்தும்; ஆத்மாவின் அஞ்ஞாநம் எவ்விஷயம்? (எனின்) ஆத்ம விஷய மென்று கூறுகின்றோம்.

அற்றேல், ஆத்மாவும் ஞாந ஸ்வரூபமாகலானும், அநந்நியமாகலானும், ஞாநப் பிரகிருதித்தன்மை முதலிய ஹேதுக்களால் அஞ்ஞாநம் பொருந்துவதே யின்று. பொருந்துகின்றதே. எங்ஙனம்? பிரமாத்திரு பிரமேய பிரமிதி லக்ஷண விபாக ஸ்வபாவ முடைய பிரமாணத்திற்கு அஞ்ஞாந மாத்திர நிமித்தமாகலின், ரஜ்ஜுவிற்குச் சர்ப்பாத்மத்தன்மை போன்று. அதனல், அதன் (அஞ்ஞாநத்தின்) நிவிர்த்தியின்கண் துவைதமாய அநர்த்தாபாவமாம். அதன் நிவர்த்தியும் வாக்கியத்தி லுள்ள பத பதார்த்தங்களை அறிந்தவனுக்கு வாக்கியத்தானே (உண்டாகின்றது). இதனல் வாக்கிய வியாக்கியானத்தின்பொருட்டு (மூன்றும்) அத்தியாயம் ஆரம்பிக்கப்படுகின்றது.

அவ்விடத்து உரைத்த பிரகாரத்தால் தத்துவமசி யாதி வாக்கியங்களி லுள்ள பத பதார்த்தங்கட்கு அந்நுவய வியதிரேகஞ் செய்யப்படுகின்றது.—

1. எப்பொழுது புருஷன் தத்துவமசியாதி (வாக்கியங்)களால் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்று அறிகின்றான், அப்பொழுது நான் எனது என்பன நஷ்டமாய் வாக்கு மனங்களின் சம்பந்தத்தை யடைவதில்லை.

எப்பொழுதே தத் என்னும் அர்த்தத்தை த்வம் என்னும் அர்த்தத்தில் அறிகின்றான், அப்பொழுதே (ஐக்கியமாய) வாக்கியார்த்தத்தை அறிகின்றான். வாக்கு மனங்களின் சம்சாரத்தை யடைவ தின்று. எக்காரணத்தால் இது நிச்சயஞ் செய்யப்படுகின்றது? எதனால்.—

2. தத் என்னும் பதம் பிரகிருத அர்த்தத்தைக் கூறுகின்றது. த்வம் என்னும் பதம் பிரத்தியகாத்ம வாசகமாகின்றது. இவ்விரு பதங்களால் (விதிக்கப்பட்ட பிரஹ்ம பாவத்தால்) நீலோத்பலம் போன்று துக்கித்தன்மை அநாத்மத்தன்மை நிவாரணங்களாம்.

இங்ஙனம் அந்நுவய வியதிரேகஞ் செய்து வாக்கியத்தானே அவாக்கி (அவாச்சி) யார்த்தம் அறியப்படுகின்றதென்று கூறப்பட்டது. இதனால் அதன் வியாக்கியானத்தின்பொருட்டுச் சூத்திர உபந்நியாசம்.—

3. பத பதார்த்த பிரத்தியகாத்மாக்கட்கு, சாமானாதிகரண்யமும், விசேஷண விசேஷியத்தன்மையும், லக்ஷ்ய லக்ஷண சம்பந்தமும் (கிரமமாக உண்டாகின்றன).



இச்சூத்திரம் உபந்நியாசஞ் செய்யுமிடத்து, யாதொரு இவ்வாக்கியார்த்தப் பிரதிபத்தியின்கண் பூர்வ அத்தியாயத்தால் அந்நுவய வியதிரேக லக்ஷண நியாயம் சர்வ கர்ம சந்நியாச பூர்வகம் கூறப்பட்டது, இது விதியினால் அடைவிக்கப்பட்டதா? அல்லது இவற்றில் ஸ்வபாவமாகவே புருஷன் பிரவிருத்திக்கின்றானா? இதனால் என் (பயன்)? கேட்பாயாக. ஆத்ம வஸ்துவின் சாக்ஷாத்கரணத்தின்பொருட்டு இந்த நியாயம் விதியால் அடைவிக்கப்பட்டதாயின், அப்பொழுது அவசியம் ஆத்ம வஸ்து † சாக்ஷாத் கரணத்தின் பொருட்டு சுபாசுப கர்மக் கூட்டங்களினின்றும் நிவர்த்தி யடைந்த ஏகாக்கிர மன முடையவர்கள் புகன்ற அந்நுவய வியதிரேகங்களால் ஆத்ம தர்சனத்தைச் செய்வார்கள். ஆத்ம தர்சனத்தைச் சமாப்தி செய்யாது, அதனினின்றும் நழுவியவன் ஆரூடபதிதனாகின்றான். (விதி யின்றி) ராகத்தாற் பிரவிர்த்தியாகுமாயின், அப்பொழுது (விதியை அதிக்கிரமித்தலாய) ஒரு தோஷமு மின்று என்று சிலர் சங்கிக்கின்றனர். (சமாதானம்) விதியால் அடைவிக்கப்பட்டதென்று கூறுகின்றோம். எதனால் கூறப்படுகின்றது.—

4. அந்நுவய வியதிரேகங்களால் இதம் பதார்த்தத்தைச் சேஷ மின்றி விட்டுச் சமமுதலிய சாதநமுடையவன் தன்னிடத்திற் றன்னைச் சீக்கிரம் பார்க்க.

5. முற்புகன்ற ஹேதுக்களால் இதம்பதார்த்தம் பரித்தியாகஞ் செய்யப்படுங்கால் (மாதாபோன்ற) சுருதி நான் யாராயிருக்கின்றேன் என்று அறியு மிச்சையுடைய அதிகாரிக்குத் தத்துவம் (அது நீ) என்று சுலபமாக அஞ்ஞான நிவர்த்தியின்பொருட்டுக் கூறுகின்றது.

† சாக்ஷாத்-கரணம் - அபரோட்சஞ்-செய்தல்.

இவ்விடத்தும், சரீர இந்திரிய மனோ புத்தியாய அநாத்மாக்களில் ஆத்மாவெனப்பாதப்பிரத்தியயமின்றி மித்தியாஞானம் (உண்டாகின்றது); அதன் நிமித்தமே ஆத்மாவிற்கு அநேக அநர்த்த சம்பந்தம் (உண்டாகின்றது). அதனையும் அந்நுவய வியதிரேகங்களானே நிவிர்த்தி செய்தமையின், நிர்விஷயத்தைத் தத்துவமசியாதி வாக்கியம் அடைந்தது. அதனால், வாக்கியத்திற்கு இந்த ஆத்மாநாத்ம விபாகமே மஹிமையாகும் என்று சாங்கியர்கள் சங்கிக்கின்றனர். அதன் நிராகரணத்தின்பொருட்டு இது கூறப்படுகின்றது.—

6. இந்த (ஆத்மாநாத்ம விவேக) ஞானம் பேதப் பிரமிதி பலமாம். சாக்ஷியினிடத்துப் பேதாபாவமும் (கேட்கப்படுகின்றது). இது (வஸ்துவினிடத்தில் பேத ஞானம்) அவித்தையின் காரியம். வாக்கியம் ஞானாத்மாவால் (அஞ்ஞானத்தை) நிவர்த்திக்கின்றது.

"வாக்கியம் ஞானாத்மாவால் நிவர்த்திக்கின்றது" என்று கேட்டுச் சிலர், மித்தியாஞானத்தின் அந்நியமாய் ஆத்மாவின் அறியாமை யின்மையின், வாக்கியத்தால் எது நிவர்த்திக்கப் படுகின்றது? அஞ்ஞானம் ஞானாபாவமாம்; அதுவும் அவஸ்து ஸ்வபாவமாகவின், சம்சார காரணத்தன்மை யாங்ஙனம்? அசத்தினின்றும் சத்து உண்டாவ தின்று; "ஹே சௌமிய! எதனால் இங்ஙனம் உண்டாகின்றது? எங்ஙனம் அசத்தினின்றும் சத்து உத்பன்னமாம்?" என்னுஞ் சுருதியான் என்று கூறுகின்றனர். இவ்விடத்துக் கூறப்படுகின்றது.

7. புத்திஉத்பத்தியின் பூர்வமே (சுழுத்தியவஸ்தையில்) எதனால் சர்வ பதார்த்தமும் அறியப்படாததே, ஒருசத்தானே (சர்வத்திற்கும்) சத்துத்தன்மையும், அதனானே சத்து (சுழுத்தியில்) அறியப்படாத்தன்மையு மாகின்றன.

"அதனால் சத்து அறியப்பட வில்லை" என்று முன் சுலோகத்தால் கூறப்பட்டது. எச்சத்து அறியப்பட வில்லை என்னும் அபேக்ஷையில் அதன் ஸ்வரூபப் பிரதிபாதநத்தின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—



8. (பதார்த்தங்களின்) பிரமிதி காலத்தில், பிரமாத்திரு பிரமாணங்களில் எது ஸ்வயம் விளங்குகின்றது, (பிரமிதி யின்றிய காலத்தில்) எது தன் மஹிமையால் சித்தம், அது அஞ்ஞாதார்த்தம் என நிச்சயிக்க.

இவ்விடத்துச் சிலர், ஈண்டு யாதொரு லௌகிக வைதிக வாக்கியமாய அவ்வெல்லாம் சம்சர்க்கரூபமாகவே வாக்கியார்த்தத்தை அறிவிக்கின்றன; இதனால் தத்துவமசி வாக்கியங்களால் சம்சர்க்க ரூபமாக நான் பிரஹ்ம மென்று அறிந்து, அவாக்கியார்த்த ரூப பிரத்தியகாத்மாவினது பிரத்தியகாத்ம விஷய நான் பிரஹ்ம மென்று எப்பொழுது நன்கு உண்டாகின்றது, அது பரியந்தம் நிதித்தியாசனஞ் செய்க; அதனால் இவ்வித ஞானத்தால் மோக்ஷம் அடையப்படுகின்றது என்று கூறுகின்றனர். அதன் நிராகரணத்தின்பொருட்டு இது கூறப்படுகின்றது.—

9. கடத்திற்கும் இதரமான ஆகாசத்திற்கும் போன்று சாமானாதிகரண்யத்தால் தத்துவம் அர்த்தங்களில் (விரோதம்) வியாவிருத்தியாகலின், நமக்கு அவாக்கியார்த்தம் சாக்ஷாத் (வாக்கியத்தானே) உண்டாகின்றது; (நிதித்தியாசன அபேக்ஷை யில்லை).

எதனுல் அவாக்கியார்த்தம் நிச்சயஞ் செய்யப்படுகின்றதெனின், அதன் ஞானத்தின்பொருட்டு விசேஷண விசேஷியங்கட்குச் சாமர்த்தியங் கூறப்படுகின்றது.—

10. த்வம் என்னும் அர்த்தத்திற்குத் தத் என்னும் அர்த்தத்தோடு விசேஷணமாகலின், துக்காபாவத்தன்மையும், தத் என்னும் அர்த்தத்திற்கு த்வம் என்னும் அர்த்தத்தோடு இதன் சந்நிதியால் பிரத்தியக்தன்மையும் (உண்டாகின்றன.)

சாமானுதிகரண்யமும், விசேஷண விசேஷ்ய பாவமும் சுருக்கமாகக் கூறப்பட்டன. லக்ஷிய லக்ஷண வியாக்கியானத்தின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

11. கூடஸ்த போத பிரத்தியக்தன்மை, ஆத்மாவிற்குச் சதா நிமித்த மின்றி யிருக்கின்றது. (புத்தியின்) போத்திருத்தன்மைக்கும், அஹந்தைக்கும், (கூடஸ்தபோதமும், பிரத்தியக்தன்மையும்) காரணமாம்; அதனுல், (புத்தியி லுள்ள) போக்த்ருத்தன்மை அஹந்தைகளால் (ஆத்மா) கூறப்படுகின்றது.

புத்திக்குக் கூடஸ்த போத பிரத்தியக்தன்மை நிமித்த எவ் அசாதாரணங்களாய போத்ருத்தன்மை பிரத்தியக்தன்மைகள், அவற்றின் விசேஷ வசநம்.—

12. புத்திக்குப் போத்ருத்தன்மை, கர்த்ருத்தன்மையாகின்றது; (புத்திக்கு பிரத்தியக்தன்மையும்) அஹங்காரத்தால் (நான் என்னுந்தன்மையால் மறைத்தலால் சைதந்நியத்தைக் குறித்துக்) கர்மத்தன்மையாகின்றது. எங்ஙனம் புத்தியில், அங்ஙனமே ஆத்மாவினிடத்தில் புத்தியிலுள்ள போத்திருத்தன்மையாதிக்குக் காரணமான போத்திருத்தன்மை, பிரத்தியக்தன்மைகளின் ஐக்கியமாம்.



"எங்ஙனம் புத்தியில் பூர்வங்கட்கு இங்ஙனமே ஆத்மாவினிடத்தில்" என்னும் அதிதேசத்தால், புத்தியின் சாதர்ம்யம் விதிக்கப்படுதலின், நாநாத்தன்மைப் பிராப்தமாகுங்கால், அதன் நிவிர்த்தியின்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

13. தர்ம தர்மித்தன்மைப் பேதம் புத்திக்கே; அதுவும், ஆத்மாவிற்கே யின்று. எதனுல் பிரத்தியக்ஜோதி, அதனுல் பேத காரண சம்பவ மின்மையின், அபேதமே.

பேத காரண சம்பவ மின்மையைக் காண்பித்துக் கூறுகின்ருர்.—

14. ஓரவஸ்தையின்கண்ணும் போதத்திற்கும் பிரத்தியக்தன்மைக்கும் பேதம், அல்லது வியபிசாரம் பார்க்கப்படுவ தின்று. எங்ஙனம் சதா அஹங்காரத்திற்கும் அதன் சாக்ஷிக்கும் (ஜடாஜடத்தன்மையாற் பேதம், சுழுத்தியில் சாக்ஷி யிருக்கினும், அஹங்காரத்தின் வியபிசாரமாம், அதுபோ லன்று).

எதனுல் அஞ்ஞாநத்தை உபாதாநமாகவுடைய புத்திக்கே பேதம், ஆத்மாவிற்கு இன்று, அதனுல் இது சித்திக்கின்றது.—

15. பிரத்தியகாத்மாவிற்குக் கூடஸ்த போதத்தால் அத்வைதத்தன்மையும் சாக்ஷாத்தன்மையும் சித்திக்கிறன. புத்தி, கூடஸ்த போதத்தால் போத்திருத்தன்மை அடைகின்றது. ஸ்வயமாக இது நாச முடையதே.

இப்பொழுது பிரகிருத பரிணமிக்கும் கூடஸ்தத்திற்குமே லக்ஷணம் கூறப்படுகின்றது.—

16. சில விசேஷங்களை ஆசிரயித்துப் பிரத்திய பிஞ்ஞாப் பிரமாணத்தால் எச்சொரூபம் விளங்குகின்றது, அது தேஹம் போன்று பரிணமியாம்.

17. சாமான்யத்தினின்றும் விசேஷத்தினின்றும் வேறுயும், தன் மஹிமையினிடத்தே யாது இருக்கின்றது, அது கட ஆகாசாதி போன்று நமக்கு அவிகாரியாகின்றது.

ஆத்மாவிற்கும் புத்திக்கும், போதமும் பிரத்யகாத்மத்தன்மையும் கூறப்பட்டன; அவ்விரண்டின் அசாதாரண லக்ஷணம் அறைதற்பொருட்டுக் கூறப்படுகின்றது.—

18. புத்திக்கு எப் பிரத்யகாத்மத்தன்மை அது தேஹத்தை ஆசிரயிப்பதானே யுண்டாகின்றது. ஆத்மாவிற்கு (எப்பிரத்தியக்தன்மை) அது ஆகாசத்திற்கு அவகாசத்தன்மை போன்று ஸ்வாபவிகமே யாம்.

19. அது போன்றே புத்திக்குப் போத்திருத்தன்மையும், பிரத்தியய உத்பத்தி நிமித்த காரணத்தானுண்டாகின்றது. ஆத்மாவிற்கு (எப்போத்ருத்தன்மை) அது பூமி (ஸ்வபாவமாகவே) சலன மின்றியிருப்பது போன்று, ஸ்வாபாவிகமேயாம்.

அந்தக் கூடஸ்த பரிணமிகளின் ஸ்வரூப மறியாமையே சம்பந்தத்திற்குக் காரணம்; வாஸ்தவ சம்பந்தம் கிஞ்சிற்றும் பொருந்துவ தின்று என்று கூறப்படுகின்றது.—



20. சம்யக்புத்தி, சம்சயபுத்தி, மித்தியாபுத்தியாய தர்மங்களால் இப்புத்தியே விசேஷிக்கப்படுகின்றது; இவற்றின் சதசத்துத்தன்மை மோஹத்தால் ஆத்மாவினிடத்தில் அத்தியாசஞ் செய்யப்படுகின்றது.

எதனுல் கூடஸ்த ஆத்ம சித்தி எனின், எதனுல்.—

21. எதனுல் (புத்தி அதன் விருத்திகளின்) அபாவம், அபாவ மாத்திரத்தாற் சித்திப்ப தின்று, சத்பாவமும்,சத்பாவ மாத்திரத்தாற் சித்திப்ப தின்று, அதனுல், புத்தி அதன் விருத்திக ளின்றியதாயும் ஹாந உபாதாந தர்ம மின்றியதாயு முள்ள ஆத்மாவின்கண் (அத்தியஸ்தத்தன்மையால் சைதந்யப் பிரகாச உதயத்தால்) சித்திக்கின்றது.

இங்ஙனம்.—

22. எதனுல் தத்துவமசி என்னும் இவ்வாக்கியத்தால் உத்பத்தி நாசமாய அந்நுவய விபதிரேக ஹேதுக்களால், சர்வ அநாத்மாக்களையும் விட்டு அதனுல் (எஞ்சுகின்ற) அஞ்ஞாநத்தை நிவர்த்திக்கின்றது.

கிரந்த லாகவத்தாற் புத்தி லாகவம் பிரயோஜகம் என்று, இவை முதலியன மீண்டும் மீண்டும் கூறப்படுகின்றன. அவ்விடத்துத் தத்துவமசியாதி வாக்கியத்தால் கிரகிக்கப்பட்ட அத்விதீய ஆத்மார்த்தம் போன்று பரோக்ஷ சத்தும் இரண்டாவ தர்த்தமும் விளங்குகின்றது. அங்ஙனமாயினும், இவ்வர்த்தம் சுருதியால் தாத்பர்யமாகப் பிரதிபாதிக்கும் இச்சை யுடைய தன்று; முன்னும் இது விளங்குதலின் என்னு மிவ் வர்த்தத்தைக் கூறுகின்ருர்.—

23. தத் என்னும் இப்பதம் பரோக்ஷத்தைப் பரித்தியாகஞ் செய்யாது அநேகார்த்தத்தைப் பிரதிபாதிப்பது லோகத்தில் (பிரசித்தம்). பரோக்ஷத்தன்மை பெயர் மாத்திரையா னுண்டானதேயாம்.

24. அதுபோன்று த்வம் என்னும் இப்பதமும் சம்சாரித்தன்மையைப் பரித்தியாகஞ் செய்யாது, சாக்ஷாத் மாத்திர அர்த்த வாசகமாய சுரோதாவினிடத்துப் (பிரசித்தமாம்). அச் சம்சாரித் தன்மையும் பெயர் மாத்திரையா னுண்டானதேயாம்.

விருத்த உத்தேசநத்தானும் பரோக்ஷத்தன்மை துக்கித்தன்மைகள் தாத்பரிய மன்றென்று கூறப்படுகின்றது.—

25. (தத்துவமசியாதி) வாக்கியத்தி னுள்ள உத்தேசிக்கப்படும் சம்சாரித்தன்மைக் குணத்தோடு கூடி விசிஷ்டமாய த்வம் பத வஸ்து, ஆகாங்க்ஷிக்கப்படும் (சம்சார ரகித தத் பதார்த்தத்தோடு) சம்சர்க்கம் இன்று. (இங்ஙனமே தத் பதமுமாம்.)

எதனால் இஃதிங்ஙனம் அதனால் தாத்பரிய மின்றிய தத் த்வம் பதார்த்தங்களின் விசேஷண விசேஷ்ய பாவம், பேத சம்சர்க்க மின்றிய அவாக்கியார்த்த லக்ஷணையானே என்று உபசம்ஹாரஞ் செய்யப்படுகின்றது.—

26. தத் பதம் விசேஷணார்த்தத்தை யுடையது. த்வம் பதம் விசேஷ்யார்த்தத்தை யுடையது. அங்ஙனமே (தத் பதம் விசேஷ்யார்த்த முடையது. த்வம் பதம் விசேஷணார்த்த முடையது). அவ்விரண்டற்கும் லக்ஷிய லக்ஷண சம்பந்தம் பிரத்தியகாத்மத்தன்மையால் உண்டாகின்றது.



தாத்பரிய மின்றியதாயும், விருத்தார்த்தமாயும், நிராகரிக்கத் தக்கதாயு முள்ளதற்கு லக்ஷணார்த்தத் தன்மை யாங்ஙனம்?

27. ரஜ்ஜுவிற்குச் சர்ப்பம் லக்ஷணம் போன்று ஆத்மாவிற்கு அஹங்காரம் லக்ஷணமாகின்றது. எங்ஙனம் சர்ப்ப பாதத்தானே வாக்கியார்த்த ஞான முண்டாகின்றது, அங்ஙனம் அஹங்காரத்தை ஆசிரயித்தே அஹங்கார பாதத்தானே வாக்கியார்த்தம் அறியப்படுகின்றது.

இவ் வாக்கியார்த்தப் பிரதிபத்தியும் அந்நுவய வியதிரேக மறிந்தவனுக்கே. எதனால்.—

28. எவ்வளவு எவ்வளவு தேஹாதிகளை நிவர்த்தித்துப் புருஷன் உட்செல்லுகின்றான், அவ்வளவு அவ்வளவு தத் அர்த்தமும் த்வம் அர்த்தத்திற் பிரவேசிக்க இச்சிக்கின்றது.

எக்காரணத்தால் தேஹாதி அநாத்மத் தன்மைப் பிரதிபத்தியின் கண்ணே ஆத்மா அதன் பொருட்டு ஆத்மத்தன்மையால் இச்சிக்கப்படுகின்றது, விபரீதமாக வின்று (எனின்,) கூறப்படுகின்றது. பிரத்தியகாத்மாவை அறியாமையாய அஞ்ஞானம், அநாத்ம ஸ்வபாவமாகலின், அதனி னுண்டாய அஹம் புத்தியாதி தேஹபரியந்தத்தி னிடத்தும், ஆத்மத்தன்மை அவித்தையாற் செய்யப்பட்டதே. ஆத்மத்தன்மை போன்று அநாத்மத்தன்மையுமாம்; அது அவித்தைக்கே. எதனால், நிர்த்தோஷமான வித்துவான் அவாக்கியார்த்த ரூப கேவலமாகவே எஞ்சுகின்றான், அதனால் கூறப்படுகின்றது.—

29. தனது ஸ்வரூபமாயிருந்தும் தத் அர்த்தம் தேஹாதி வியவதானத்தால் பரோக்ஷமாகவே அறியப்படுகின்றது. இதனுல் அவற்றை அநாத்மா வென அறியில், தத் பதத்திற்கு அபரோக்ஷ ஆத்மரூபத்தன்மை யுண்டாகின்றது.

உரைத்த பொருளின் ஞாந சௌகரியத்தின் பொருட்டுத் திருஷ்ட்டாந்தக்கிரஹணம்.—

30. எங்ஙனம் நான் என்று அபிமானிக்கும் சரீரத்தின் ஏகதேசத்தில் உத்பத்தியான பித்தமுடைய புருஷனுக்குத் தன்னிடத்தி லுள்ள பித்தம் பாஹ்யத்தி லுள்ள சங்கினிடத்தில் பித்தத்தன்மை (சங்கு பீதம் என்று) தோற்றுவது போன்று, அங்ஙனமே பிரத்தியகாத்மாவின் சைதந்யத்தன்மை பாஹ்யத்திலிருப்பது போன்று தோற்றுகின்றது.

எதனுல் இங்ஙனம் அதனுல் சுத்த மென நிச்சயிக்க.—

31. பதங்களை வாக்கியங்களினின்றும் ஆபாவ உத்வாபங்களால்சக்தியை அறிந்து,பதார்த்தங்களை அந்வய வியதிரேகங்களாலும், விருத்தர் வியவகாரங்களாலும் அறிந்து, (வாக்கியத்தால் தாத்பரிய அநுஸாரமாக) வாக்கியார்த்தத்தை அநாயாசமாக அறிகின்றுன்.

சாமான்ய மாத்திர விருத்தியாய பதத்திற்கு வாக்கியார்த்த ஞாந காரணத்தன்மை எங்ஙனம்? சத்தியம்.—

32. பதம் சாமாநியத்தைக் கூறுகின்றது. விசேஷம் வாக்கிய தாத்பர்ய விஷயமாம். பதம் சுருதிலிங்காதியோடு சம்பந்தித்து விசேஷார்த்தத்தைக் கூறுகின்றது.



அந்வய வியதிரேக புரசரம் வாக்கியமே சாமாநாதிகரண்யாதியால் அவித்தியா படல நாச வாயிலாய் முமுக்ஷுவை ஸ்வாராஜ்ஜியத்தில் அபிஷேகஞ் செய்கின்றது. இவ்வர்த்தம் அந்நுவய வியதிரேகமாத்திர சாத்திய மன்று என்று கூறப்படுகின்றது.—

33. புத்தியாதிகட்கு அநாத்மத்தன்மை லிங்கத்தா (யுக்தியா)லும் சித்திக்கின்றது. இவ்வளவு மாத்திரத்தால் (அவற்றிற்குக் காரண அஞ்ஞாநம்) நிவர்த்தியை அடைவ தின்று. அதனுல் வாக்கியத்தை நன்கு ஆசிரயிக்க.

கேவலம் அநுமான மாத்திர சரணர்கள் இச்சிக்கும் அர்த்தம் அடையமட்டார்கள் என்பது (மாத்திரம்) அன்று; (பின்னையோ) அநர்த்தத்தையும் அடைகிறுர்க ளென்று கூறப்படுகின்றது.—

34. அநுமானமே முக்கிய நேத்திரமாக வுடைய தமஸ்விகளாய பௌத்தர்கள் சுருதியை ஆதரிக்காது இதனுல் நிராத்மத்தன்மை அடைகின்ருர்கள்.

அநாதரத்தில் காரண மின்று; எதனுல், சர்வவிடத்துமே பிரமாணத்திற்குப், பிரமாணுந்தரப் பிரதிபன்னப் பிரதிபாதநம், அல்லது, விபரீதப் பிரதிபாதநம், அல்லது சம்சயிதப் பிரதிபாதநம், அல்லது பிரதிபாதந மின்மை எனு (மிவையே) அநாதர நிமித்தங்களாம். இவைகளின் அந்நியதமமும் காரண மன்று. எதனுல் கூறப்படுகின்றது.—

35. வேறு பிரமாணத்தால் அறியப்படாத நிர்த்துக்கி ஆத்மாவை ஸ்வரூபமாகச் சுருதிபோதிக்கின்றது. எதனுல் பிரமாண மன்று என்று கூறப்படுகின்றது?

சம்சயிக்கத் தக்க வஸ்துவை அறிவிப்பது மன்று; எதனல்.—

36. சம்சயத்திற்குக் காரணமான அஹங்காராதிகள் அநுமானத்தால் நிவர்த்தியாகு மிடத்து, ஆத்மாவினிடத்தில் வாக்கியத்தால் எங்ஙனம் சம்சயம் உண்டாம்?

மற்றும்.—

37. எவ்விடத்துச் சம்சயம் உண்டாகின்றது (அவ்விடத்து) இது ஆத்மா வென்று பண்டிதர்களால் அறியத்தக்கதன்று. எதனல் ஸ்வயம்பிரகாச ரூபமாகலின் ஆத்மாவிற்குச் சம்சயப் பிராப்தி யின்று.

அப்பிரதிபாதநமோ தூரத்தின்கண்ணே நீக்கப்பட்டது. எதனல் கூறப்படுகின்றது.—

38. சுகமாக அறிதற்கு யோக்கியத்தின்கண்ணும் எவனுக்கு ஒரு விதத்தும் அநுபவ முண்டாவதில்லை, நரசமான ஆகிருதியோடு லோஷ்டத்திற்குச் சமானமான அவனைச் சாஸ்திரம் எங்ஙனம் போதிக்கும்?

அந்நுவய வியதிரேக புரஸ்ஸரம் வாக்கியமே அவாக்கியார்த்த ரூப ஆத்மாவைப் பிரதிபாதிக்கின்றது என்னும் இப்பக்ஷத்தின் திடத்தின்பொருட்டுச் சுருதி உதாஹரணம் உபந்யாசஞ் செய்யப்படுகின்றது.—

39. நான் இக்கந்தத்தை முகருகின்றேன் என்னும் (பிரமாதைவை) எவ் வவிக்கிரியம் அறிகின்றது, அது ஆத்மா, அது பரம்ஜோதியாம். இது சுருதியின் சிரசின்கண்ணுள்ள வசநமாம்.



எங்ஙனம் "அது சத்தியம்", "அதுஆத்மா", "தத்த்வமசி" என்னும் இவற்றின் அங்கத்தன்மையால் அந்நுவய வியதிரேக சுருதி, எங்ஙனம் "யாதொரு இந்த நேத்திரத்தில் புருஷன் பார்க்கப்படுகின்றுன்." என்பதுமுதல் "இந்த முகருவதை எது அறிகின்றது" என்பது வரை (அங்கமோ) அங்ஙனமே நான் பிரஹ்மமென்னு மிதன் அங்கமாம்.—

40. அஹம் பதார்த்தத்திற்குச் சர்வ அநர்த்த ஜாதமின்றிய பிரத்தியகாத்ம (லக்ஷிய) அர்த்தத்தை, "யாதொரு இந்த" என்பதாதியால் நியாயத்தோடு கூடிய சுருதி பன்முறை கூறுகின்றது.

அஹம் வியாஜத்தால் ஆத்மார்த்தத்தைப் போதித்தற்கு இச்சிக்கின்றது என்னும் இவ்வர்த்தம் எங்ஙனம் நிச்சயிக்கப்படுகின்றது? (எனின்) எதனல்.—

41. இவ்வாத்மா ஸ்வயம் ஜோதி; ரவி சோம அக்கினி வாக்கு அஸ்தமான காலத்துத், திருக்கே சித்த சேஷ்டையாய ஸ்வப்ந சுழுத்திப் பிரபஞ்சத்தை விளக்கிக்கொண் டிருக்கின்றது.

அதிசயமாக நிர்ணயஞ் செய்யும் வசநமும் (ஜனகரால்) சங்கிக்கப்பட்ட முனி (கூறினர்).

42. "ஆத்மாவானே" எனக்கேட்டு, இவ்வாத்மா வெது வென பிரஸ்னஞ் செய்புமிடத்து, புத்தியினின்றும் பரமாயும், ஸ்வயம் முக்தமாயும் ஆத்மாவை(அறிக வென) முனி கூறினர்.

எதனல் ஆத்மா இவ்விடத்து அஹம் வியாஜத்தாற் பிரத்தியக் மாத்திரத்தை கிரஹிக்கும் இச்சை, அதனல் அஹம் விருத்தி ஸ்வரூபத்தின் லயத்தானே

வாக்கியார்த்த ஞானத்தின்பொருட்டுக் காரணத்தன்மை பிரதிபாதிக்கப்படுகின்றது என்னும் இவ்வர்த்தம் கூறப்படுகின்றது.—

43. எதனுல் முமுக்ஷு அஹம் விருத்தியானே பிரஹ்மத்தை அறிகின்றான், அதனுல் அஹங்காரம் தன் ஸ்வரூபலயத்தாற் காரணத்தன்மையாகின்றது.

இதனுனும் "அஹம் கிராஹ்யத்தினும் அன்று, அஃதின்றியதினும் அன்று" என்பதாதி எது பிரதிஞ்ஞை செயயப்பட்ட அர்த்தம், அது யுக்திகளால் உபபாதிக்கப்பட்டது என்று உபசம்ஹாரஞ் செய்கின்றார்.—

44. கிரகிக்கப்பட்ட அஹம் பதார்த்தம் எனின், எதனுல் வித்துவான் அடைவதின்று, பிரதியக்ஷாதி விரோதத்தால் எனின், (தத் த்வமசியாதி) வாக்கியம் பிரத்தியக்காத்மாவினிடத்தில், சுக துக்காதி விசிட்டத்தில் (தத் த்வமசியாதி வாக்கியம்) அன்று; (பின்னை யோ, பிரத்தியக்ஷாதிகளே புகல்கின்றன).

முன் சுலோகார்த்தமே ஸ்பஷ்டமாகக் கூறப்படுகின்றது.—

45. பிரத்தியக்ஷாதி சர்வப் பிரமாணங்களும் பாஹ்ய விஷயங்களே; ஆத்ம விஷயங்க ளன்று. பிரத்தியக்காத்மாவினிடத்திற் பிரவிருத்தமான வசநங்கள் ஸ்வரூபமாக அது சத்தா (தத்துவமசியா)பிருக்கின்றாய் என்று (கூறுகின்றன).

ஆகலின், கொள்ளுதற் றள்ளுதற் ஸ்வபாவ முடைய பிரமாத்ரு பிரமாண பிரமேயங்களினின்றும் அந்நுவய விபதிரேகங்களால் முஞ்சத்தின்கண் ஈஷிகை



(பசும்புல்) போன்று சர்வபுத்தி விகார சாக்ஷித்தன்மையால் ஆத்மாவைப் பின்னஞ் செய்து தத் த்வமசியாதி வாக்கியங்களால் அபூர்வாதி லக்ஷண முடைய ஆத்மாவை அறிக. அவ்விது கூறப்படுகின்றது.—

46. நான் துக்கி சுகி என்னும் இப் பிரத்தியயம் (உத்பத்தி நாச முடைமையின்) அநித்தியம். பிரமிதி பரியந்தம் (பிரத்தியயங்கள்) எச்சாக்ஷியால் விளக்கப்படுகின்றன, அது என்னுடைய ஆத்மா வென்று வாக்கிய ஞான முண்டாகின்றது.

வேறு பிரமாண சம்பந்த மின்றியும், சர்வ காரிய காரணரூப த்வைதப் பிரபஞ்ச மின்றியும், சத்திய ஞானனந்த லக்ஷணத்தையு முடைய ஆத்மாவைத் தத் த்வமசி, அஹம் பிரஹ்மாஸ்மி என்பனவாதி வாக்கியங்கள் சம்சயஞ் செய்யத்தக்க மித்தியா ஞான ரூப அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாய் சாக்ஷாத் அபரோக்ஷமாகக் கரத்திலிருக்கும் ஆமலகம் போன்று பிரதிபாதிக்கின்றன என்று பன்முறை பகரப்பட்டது. அவ்விடத்துச் சிலர், யதார்த்த நிலையிலிருக்கும் உண்மையான வஸ்துவின் வியாக்கியான நிஷ்ட தத்த்வமசியாதி வாக்கியங்களாற், கூறிய அர்த்தம் உணர்வு கோடற்குச் சக்த மன்றும்; அவைகட்கு அபிதா சுருதித்தன்மையான். வேறு பிரமாண அபேக்ஷை யின்றிய அபிதா சுருதியான நதி தீரத்தின்கண் பழங்க ளிருக்கின்றன வென்னும் இது முதலியவற்றிற்கு, லோகத்தில் பிராமாண்யம் அங்கீகரிப்ப தின்று. இதனுல் நியோக (விதி) முகத்தானே அபிதா சுருதிக்குப் பிராமாண்யம் யுக்தம்; நியோகம் வேறு பிரமாண நிரபேக்ஷமாகலின் என்று கூறுகின்றனர். இதன் பரிஹாரத்தின்பொருட்டுச் சர்வப் பிரத்

தியக்ஷாதி பிரமேயத்தன்மை நிராகரண வாயிலாய் அதீந்திரியார்த்த விஷயமாகலின் அபிதா சுருதிக்குப் பிராமாண்யம், நித்திரை பண்ணும் புருஷனை எழுப்புவோனது வாக்கியம் போலக் கூறவேண்டும் என்று இவ் வாரம்பம் (செய்யப்படுகின்றது).—

47. நித்திய ஞான ரூபமாகலானும், அந்நியப்பிரமாண அபேக்ஷை யின்மையானும், சப்தாதி குண மின்மையானும், சம்சயம் உண்டாகாமையானும்.

48. திருஷ்ணையின் காரியரூபமான பிரத்தியக்ஷாதிகளால். ஆத்மா பிரமிதி செய்யப்படுவ தன்று; பிரத்தியகாத்மத்தன்மையானும், ஸ்வார்தமாகலானும், அப்பிரமேயத்தானும்.

சுருதியும் இவ்வர்த்தத்தைக் கூறுகின்றது.—

49. (பிரத்தியக்ஷ திருஷ்டி) திருசியமாகலானும், பரிச்சின்னமாகலானும், பராக்ரூபாதி ஆசிரயமாகலானும், அதனால், அதன் விபரீத ஸ்வயம் பிரகாசஆத்மா, திருஷ்டியால் அறியப்படுவ தின்று.

50. திருஷ்டியின் திருஷ்டாவாயும், தனக்குப் பிரத்யகாத்மாவாயு முள்ள ஆத்மாவை அறிதல் சாத்திய மன்றும் என்று யுக்தியாற் சித்தித்ததை, அதனால் பிரமாண ரூபமான சுருதி அதிப்பிரியத்தோடு கூறுகின்றது.

அநுமானப் பிரமாண விஷய மின்மைக்கண் வேறு காரணமும் கூறப்படுகின்றது.—

51. (அவிநாபாவ ரூப சம்பந்தக் கிரகண) பிரத்தியக்ஷம் பராக்காகலின்,எதனால் சம்பந்தக் கிரகஹணம் இன்று, அதனால், ஆத்மாவின் அநுபவம் அநுமிதியால் ஒருகாலத்து முண்டாவ தின்று.



இங்ஙனம் பிரமாத்ருப் பிரமேய வியவகாரமாய இவ்வெல்லாம் பாஹ்ய விஷயமே. ஆந்தர ஆத்மாவை அறிதற்குச் சமர்த்த மன்று.ஆகவே, இதனுனே கூறிய பொருள் அநுமானஞ் செய்தற்குச் சமர்த்தமாகின்றது என்று கூறப்படுகின்றது.—

52. எதனால் இவ்வெல்லாப் பிரமாண வியவஹாரமும் பாஹ்யமே, அதனால் நன்கு விசாரித்தும் பிரத்தியக்ஷாதிகளால் அநாத்மாவினிடத்தே பார்க்கப்படுகின்றன. (பிரத்யட்சாதிகள் அநாத்மாவை அறிவன).

எக்காரணத்தால் லௌகிகப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் நான் பிரஹ்மம் என்னும் வாக்கியார்த்தம் அறியப்படுவ தில்லை, அக்காரணத்தால்.—

53. எதனால் அந்நுவய வியதிரேகங்களால் (தேஹாதி) பிரான பரியந்தம் நிவர்த்தித்து, நான் எப்படி யிருக்கின்றேன் என்று அறியும் இச்சை யுடைய அதிகாரிக்குத் தத்த்வமசி என்று சுருதி கூறுகின்றது.

எதன் நிச்சயம் வாக்கியார்த்தம், அதை அறிந்தவனுக்கு நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்று ஆவிர்ப்பாவ முண்டாகின்றது; இது பரியந்தமே அந்நுவய வியதிரேக நியாயமாம்.

திருஷ்ட்ரு திருசிய விபாகத்தானும், உத்பத்தி நாச சாக்ஷி விபாகத்தானும், சுருதி அநுஸாரத்தால் சுருக்கிக் கூறப்படுகின்றது.—

54. தேஹம் திருசியமாகலின் கடம் போன்று (அறிக). தேஹம் போன்று இந்திரியங்களையும் (அறிக). இந்திரியம் போன்று மனதையும் அறிக. மனம் போன்று நிச்சயாதி யுடைய புத்தியை (அறிக).

அங்ஙனமே சகல காரிய காரணங்களின் உத்பத்தி நாச விபாக சாக்ஷித்தன்மையானும்.—

55. (உத்பத்திக்குப்) பூர்வம் அசத்தா யிருந்து, பின் சத்துத்தன்மையை அடைகின்றது. சத்தாயிருந்து (நாசமாய்) அசத்துத்தன்மையை அடைகின்றது. (இது) அநாத்மாவின் ஸ்வபாவமாம். அதன் சாக்ஷி ஸ்வயம் அதன் விபரீதமாம் (உத்பத்தி நாச மின்றிய தாம்).

அவ்விடத்துக் கடாதி திருசியங்கட்கு அநாத்மத் தன்மையை, திருஷ்ட்ரு ஆத்மபூர்வகம் பிரத்தியக்ஷத்தானே பிரமாணத்தான் அறிந்து, அநாத்மாவின் அசாதாரண தர்மங்களை நிச்சியித்து, அந்தத் திருசியத்தன்மை உத்பத்தி நாசாதி தர்மங்களால் சரீர இந்திரிய மன நிச்சயாதி விருத்திகளை, அநாத்மாவாக நிவர்த்தித்து, அஹம் விருத்தி யுடையதும் திருசியத்தன்மை சமானமாகலின், திருஷ்ட்ரு பூர்வகத்தன்மை நிச்சயிக்கப்படுகின்றது. அவ்விது கூறப்படுகின்றது.—

56. எங்ஙனம் கடாதிகள் பரம்பரையால் தேஹாதி விசிஷ்ட திருஷ்டாவிற்கு லிங்கமாகின்றன, இங்ஙனம் திருசியமாகலின், தேஹாதி விசிஷ்ட நானும், திருஷ்டாவாய ஆத்மாவிற்கு லிங்கமாகின்றது.

அற்றேல், திருஷ்டா தர்சன திருசியங்கட்கு ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்திகளில் உத்பத்தி நாசம் பார்க்கப்படுதலின், அவற்றின் உத்பத்தி நாசங்கள் எதைச் சாக்ஷியாகவுடையன, அது உத்பத்தி நாச மின்றிய ஆத்மாவாம். எங்ஙனம் எதன் நிமித்தங்கள் ஜகத்திற்குப் பிரகாச அப்பிரகாசங்கள், அது பிரகாச அப்பிரகாச மின்றிய சூரியன். எப்பொழுது இங்ஙனம், அப்பொழுது உத்



பத்தி அஸ்தமன மின்றிய விஞ்ஞாந மாத்ர ஸ்வபாவமுடையதாய் வாக்கியத்தால் அறிவிக்கப்படும் அர்த்தத்திற்கு அநுமானத்தானே பிரதிபன்னமாகலின், மீண்டும் வாக்கியத்திற்கு நிர்விஷயத்தன்மை பிராப்தமாம் (எனின்), இது தோஷ மன்று; லிங்க வியவதானத்தால் அதன் பிரதிபத்தியாகலின். அற்றேல், சாக்ஷாத் அபரோக்ஷ ஆத்மஸ்வபாவத்தால் அநாத்மாவின் ஹாந உபாதாநத்தன்மைகளின் சம்பந்தம் கிரகிக்கப்படுதலின், வாக்கியம் என்ன அதிசயத்தைச் செய்யும்? இங்ஙனம் கூறற்க; அதன் பிரதிபத்தி லிங்கஅதீனமாகலின். லிங்க வியவதானத்தால் (உண்டாம்) ஆத்மாவின் ஞானம், சாக்ஷாத் அபரோக்ஷ ஞாந மன்று; "எந்த நிர்விசேஷ ஆத்மாவைச் சாதகன் நிரந்தரம் அதைத் தியானிக்கின்றுன் அந்தப் பரமாத்மாவால் (இந்த ஆத்மா, சாதகனுல்) அடையத்தக்கது; அச்சாதனுக்கு இவ்வாத்மா (தன் சரீரத்தை) பிரகாசிக்கின்றது" என்னுஞ் சுருதியான். இதனுல் கூறப்படுகின்றது.—

57. லிங்கம் அஸ்தித்தன்மை நிஷ்டமாகலின், (சதசத் தின்றிய ஆத்மாவின்) வாக்கியார்த்த போதக மன்று; இதனுல் சத் அசத்தினின்றும் பின்னமாய ஆத்மா வாக்கியத்தால் விளங்குகின்றது.

அற்றேல், சதசத் விகற்ப சமூக மின்றிய வஸ்து, வாக்கியத்தால் உங்கட்கு அபீஷ்டம், அங்ஙனமாயினும் வாக்கிய விஷய ஆசை நிவர்த்திக்கின்றது. எதனுல் வாக்கிய சிரவண மின்றியும் சர்வ விகற்ப மின்றிய வஸ்து, கோபாலன் முதல் அவிபால பண்டித பரியந்தம் சுழுத்திக்கண் (அநுபவ) சித்தம், அதனுல் வாக்கிய சிரவணத்தாற் பிரயோஜகமின்று (எனின்), இஃது இங்ஙன மன்று; காரணம் என்னை? சர்வ அநர்த்த பீஜ

மான ஆத்மாஞ்ஞானம் சுழுத்திக்கண் பொருந்துகின்றமையின். சுழுத்தியின்கண் அஞ்ஞான மின்மையாயின், வேதாந்த வாக்கிய சிரவண மநந நிதித்தியாசனங்களின்றியும் நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்னும் நிச்சயத்தால், சர்வப் புருஷர்கட்கும் ஸ்வபாவமாகவே சுழுத்தி ஞானத்தால் சகல சம்சார நாசம் வரும். கைவல்யத்தினின்றும் மீண்டு வெளிப்படுதல் நியாய முடையதன்று; மோக்ஷ மின்மைப் பிரசங்கத்தால். தூங்கியவன் வேறே, எழுந்தவன் வேறே என்று கூறுதற்குச் சமர்த்த மன்று; சுழுத்தியின்கண் நான் வேறு ஒன்றையும் பார்க்க வில்லை என்று எழுந்தவனது பிரத்தியபிஞ்ஞை பார்த்தலின். அதனுல், அவசியம் சுழுத்தியில் அஞ்ஞானம் அங்கிகரிக்க. அற்றேல், அவ்விடத்து அஞ்ஞான மிருக்குமாயின், ராகத் துவேஷ கட அஞ்ஞானுதி போன்று பிரத்தியக்ஷமாகத் தோற்றும், இவ்வுலகத்தில் கடத்தை அறியேன் என்று அஞ்ஞானம் வியவஹிதமின்றிப் பிரத்தியக்ஷமாவது போன்று. (எனின்), இவ்விடத்துக் கூறப்படுகின்றது. அற்றன்று; வியஞ்ஜக மின்மையின். எங்ஙனம் வியஞ்ஜக மின்மை எனின், கேட்பாயாக.—

58. எங்ஙனம் பாஹ்ய விருத்தியை உத்பத்தி செய்யாது, அஹம் விருத்தி வெளிப்படுவ தின்று, அதுபோன்று அந்தக்கரண மின்றி அஞ்ஞானத்தின் பிரத்தியக்ஷ வியவஹார காரணத்தன்மை வெளிப்படுவ தின்று.

சிலர், கழிந்ததை நினைத்து “ திருசியமாகலின். இங்ஙனம் அஹங்காரமும் திருஷ்டாவாய ஆத்மாவிற்கு லிங்கமாகின்றது” என்று யுக்தி யின்றிக் கூறப்பட்டதென்று கூறுகின்றனர். காரணம் என்னே? அஹங்காரத்திற்கும் அதன் ஞாதாவிற்கும் விவேகப் பிரசித்தி



யின்மையின். எங்ஙனம் ஈண்டு கட தேவதத்தர்கட்குக் கிராஹ்ய கிராஹகத்தன்மையால் அதிஸ்புடமான விபாகம் லோகத்தில் பிரசித்தம், அங்ஙனம் ஈண்டு அஹங்காரத்திற்கும் அதன் ஞாதாவிற்கும் விபாக மின்று. ஆகலின், இஃதுண்மை யுடைக் கூற்றன்றும் (எனின்), இவ்விடத்துக் கூறப்படுகின்றது.—

59. எங்ஙனம் வஹ்நி காஷ்டங்களில் தாஹ்ய தாஹகத்தன்மை ஓரிடத் திருக்கின்றன, அங்ஙனமே அஹங்கார ஞாதாக்களின் ஞேய ஞாத்ருத்தன்மை பரஸ்பர மிருக்கின்றன.

இங்ஙனம் அவித்தையினின்று முண்டான அந்தக்கரணம், பாஹ்ய விஷய நிமித்த ரூப அவச்சேதத்தின் பொருட்டு அஹம் விருத்தி யுண்டாகின்றது, அதனுல் அவச்சின்னமாய்க் கூடஸ்தப் பிரயகாத்ம உபாதாந ஞானரூபம் வியவதான மின்மையின் விஷயபாவத்தை (பாஸ்யத்தன்மையை) அடைகின்றது. ஆகலின் அவ்விடத்து அந்த ஞாத்ரு அஹந்தைகட்கு அவபாஸக அவபாஸ்யத்வ சம்பந்த மின்றி, வேறு அந்நிய சம்பந்தம் பொருந்துவ தின்று. அஹந்தாரூபமோ ஆத்மாவோடு சேர்ந்து நான் என்னும் கஞ்சுகத்தைத் தரித்துக் கொண்டு, உபகார்யத்தன்மை உபகாரகத்தன்மைச் சமர்த்தமாய், பாஹ்ய விஷயமாய உபகாரியோடு அல்லது, அபகாரியோடு ஆத்ம, ஆத்மீய சம்பந்தத்தை அடைகின்றது. அது கூறப்படுகின்றது.—

60. சாக்ஷிக்கு இது என்னும் ஞானம் (சாக்ஷாத் அஹம் விருத்தி அவச்சின்னத்தில்) உண்டாகின்றது. அங்ஙனமே அஹங்காரத்திற்கு எனது என்னும் ஞானம் சம்பந்தத்தால்) உண்டாகின்றது. அஞ்ஞான உபாதி

யுடைய சைதந்ய ஆபாசத்தால் இதம் பிரத்தியயம் உண்டாகின்றது. இதனுல் நான் எனது என்று ஞாந பரிணமம் உண்டாகின்றது.

ஒரே ஞாதாவிற்கு ஆந்தர பாஹ்ய நிமித்த பேதத்தால் பின்ன விஷயத்தின்கண்ணும் இது எனது என்று ஞாந வேற்றுமை உண்டாகின்றதென்று கூறப்பட்டது. இவ்விடத்து உபகார விசிஷ்ட ஞாதாவிற்கே விஷயத்தில் எனது என்னும் பிரத்தியயம் உண்டாகின்றது. விபர்யயத்தில் இது என்னும் பிரத்தியயமென்று எங்ஙனம் அறியப்படுகின்றது? (எனின்) அந்நுவய வியதிரேகங்களால் அறியுங்கள். அது யாங்ஙனம்? கூறப்படுகின்றது.—

61. சாக்ஷிக்கு (அஹங்காரத்தோடு) நிவர்த்தியின்மையின் அஹங்காரம் கடாதி போன்று எனது என்னும் பிரதீதி விஷயமாவதின்று. மோஹ மாத்திர ஆசிரயமாகலின், இது என்னும் பிரதீதி யுண்டாகின்றது.

மோஹ அதன் காரிய ஆசிரயத்தால் ஞாதா விகாரங்கட்கு முற்சுலோக மிரண்டில் இது எனது என்னும் ஞாநந்நுவயம் காட்டப்பட்டது. இப்பொழுது அதன் வியதிரேகத்தால் வியதிரேகப் பிரதர்சனத்தின் பொருட்டுக் கூறப்படுகின்றது.—

62. (சுழுத்தியில் சப்தாதி ஆகார பரிணம) விகாரமும் அஞ்ஞாநமும் இன்மையின், ஆத்மாவிற்கு இது எனது என்னும் பிரத்தியயம் (பார்க்கப்படுவது) இன்று, (எனின்) எழுந்தவனுக்கு ஒன்றும் அறியாதிருந்தேன் என்று (ஸ்மரண முண்டாதலின்) எதனுல் அஞ்ஞாநம் (இன்று)?



ஆத்மாநாத்ம விவேகத்திற்கு அளவு தெரிவித்தற் பொருட்டுக் கூறப்படுகின்றது.—

63. (த்வம் பதார்த்த சோதக) வாக்கிய (அந்நுவய வியதிரே ஆத்மாநாத்ம விவேக அநுபவ) பிரத்திய க்ஷப் பிரமாணங்களால் இவ்வளவு அர்த்தம்(அநாத்ம வர்ஜித கூடஸ்த ஆத்மா) அநுபவிக்கப்படுகின்றது; சதா ஆத்மாவிற்கு அநர்த்தத்தைச் செய்யும் அஞ்ஞாநத்தின் நிவிர்த்தி வாக்கியத்தானே (உண்டாகின்றது).

இரண்டாம் அத்தியாய ஆதியில் நான்கு சுரோதாக்கள் கூறப்பட்டன. அவற்றுள் * சர்வ அநாத்மாக்களும் நிவர்த்தியாகுமிடத்து, எவன் பிரத்தியகாத்மாவினிடத்து அவாக்கியார்த்தத் தன்மையை அறிகின்றான், அவன் சர்வப் பிரதிபந்த காரணத்தை நிவர்த்தி செய்திருத்தலின், அவனைக் குறித்துப் புகலத்தக்க தொன்றும் எஞ்சுவ தின்று. ¶ எவன் வாக்கிய சிரவண மாத்திரத்தானே அறிகின்றான், அவனுக்கும் அதீந்திரிய சக்தி யுடைமையின், அற்பமும் அபேக்ஷிக்கத்தக்க தின்று ‡ எவன் தத்த்வமசியாதி வாக்கியத்தைக்கேட்டு ஸ்வயமே அந்நுவய வியதிரேகஞ் செய்து அதன் முடிவின்கண்ணே வாக்கியார்த்தத்தை அறிகின்றான், இவனும்யதார்த்தத்தை அறிந்தமையின்பூர்வம்போன்று உபேக்ஷிக்கத்தக்கவனே. † எவன் அந்நுவய வியதிரேகஞ் செய்தும், யதார்த்த வஸ்துவின் ஞாநத்தின் பொருட்டு, மீண்டும் மீண்டும் வாக்கியத்தைக் கேட்கின்றான், அந்நுவய வியதிரேகஞ் செய்த அவனுக்கு, எங்ஙனம் வாக்கியஞ் சிரவணஞ் செய்விக்கின்றது என்று கூறப்படுகின்றது.—

---

* விராட் போன்று. ¶ பிருகு போன்று.
‡ பிசாசகன் போன்று. † சுவேதகேது போன்று.

64. அந்த ஒன்பது புருஷரைப் பார்க்கும் பத்தாமவனு யிருந்தும், ஒன்பது என்னும் எண்ணிக்கையால் இழுக்கப்பட்ட ஞான முடையவன், பிராந்தியால் பத்தாமவனு யிருக்கின்றேன் என்று எங்ஙனம் அறியவில்லை.

திருஷ்டாந்தத்தி லுள்ள அர்த்தத்தை தார்ஷ்டாந்திக அர்த்தத்திற் சமர்ப்பித்துக் கூறுகின்றார்.—

65. இங்ஙனம் (பிரத்தியகாத்மா) சர்வ துவைதப் பிரபஞ்ச மின்றியதாயினும், தத் த்வமசியாதி வாக்கிய மின்றி அத்விதீய சொரூபத்தை அறிவ தின்று. இதிற் காரணம் தேடவேண்டுவ தின்று.

“இதிற் காரணம் தேடவேண்டுவ தின்று” என்று கூறப்பட்டது; அது எதனுல் என்னுஞ் சங்கைக்குச் சமாதானங் கூறப்படுகின்றது. தேடுதலைச் சஹித்துக் கொள்ளாமையின், அஃதெங்ஙனம் எனின்? கூறப்படுகின்றது.—

66. அவ்விப் பிராந்தி,ஆலம்பன மின்றியதாயும், சர்வ நியாய விரோதியாயும் (இருக்கின்றது. அதனுல்) எங்ஙனம் இருள் பிரகாசத்தை (சஹிப்ப தின்று, அது போன்று) அது விசாரத்தைச் சஹிப்ப தின்று.

அவ்விவ் வவித்தையாய பிராந்திக்குச் சம்யக்ஞான உத்பத்திவாயிலாய் நிவிருத்தி.—

67. இச்சையை நிவர்த்திக்கும் இந்தச் சத்தா யிருக்கின்றுய் (தத் த்வமசி) என்னும் வாக்கியத்தாற் பிரத்தியகாத்மாவினிடத்தில் திடமான ஞான முண்டாகின்றது. இது வேறு பிரமாணத்தா லுண்டாவ தின்று.



வாக்கியம் எங்ஙனம்? பிரதிபாதிக்கின்றதெனின், திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது.—

68. எங்ஙனம் ஒன்பதை அதிக்கிரமித்துப் பத்தாமவனை அறியும் இச்சையுடைய புருஷனுக்கு, அந்நியனுல் நீயே பத்தாமவனு யிருக்கின்றுய் என்று (உபதேசிக்கப்பட்ட) வசநம் யதார்த்த ஞாநமாகின்றது, இங்ஙனமே (தத் த்வமசியாதி வாக்கியங்களிலும் யதார்த்த ஞாநத்தை அறிக).

அதுவும், தத் த்வமசியாதி வாக்கிய சிரவணத்தினின்றும் உண்டாய பிரமா உத்பந்நமாகலின்,இஃதன்று என்று வேறு ஞாந முண்டாவ தின்று. அவ்விது திருஷ்டாந்தத்தாற் கூறப்படுகின்றது.—

69. ஒன்பது பாலர்களிடத்திலும் (எண்ணும்) இவனுக்கு ஆதி மத்திய முடிவுகளில் சம்சய மின்மையின், இவனுக்கு பத்தாமவனு யிருக்கிறேன் என்னு வாக்கியத்தால் உண்டான ஞாநம் பாதிக்கப்படுவ தின்று.

70. இங்ஙனம் தத் த்வமசி என்னும் இவ்வாக்கியத்தால், துவைத நிவிருத்தியாய பிரத்தியகாத்மாவினிடத்து, த்வம் பதார்த்த சோதனை யுடைய புருஷனுக்குத் திடப் பிரமையே உண்டாகின்றது.

“பிரத்தியகாத்மாவினிடத்துப் பிரமை உண்டாகின்றது” என்று கூறப்பட்டது. அவ்விடத்து, எங்ஙனம் கடாதி பிரமேய விஷயப் பிரமை, கர்த்திராதி காரக பேதத்தை நிவர்த்திக்காது உண்டாகின்றது அங்ஙனமா? அல்லது சர்வ காரக சமூக உபமர்த்தனத்தால் பிரத்தியகாத்மாவினிடத்துச் செய்யத்தக்கதா? என்று சங்கிக்கின்றனர். கூறப்படுகின்றது.—

71. இப்பிரத்தியகாத்மாவிற்குக் கிரியா காரக பல மின்றியஅத்விதிய சைதந்நியம் ஸ்வயம் ஸ்வரூபம், அதனோடு சம்பந்தித்து (சைதந்ய ஆபாசப் பிரகாசத்தை அடைந்த) புத்தி ஆத்மா போன்று கூறப்படுகின்றது.

எதனால் இங்ஙனம்.—

72. அதனால் வித்துவானும் அப்புத்தியில் ஆத்மத்தன்மையைச் செய்கின்றான். தூரமாய இந்திரிய விஷயங்களில் (சரீராதிகளில்) உத்தர உத்தரம் நாசமடைகின்றது.

வாக்கியமே உண்மையான வஸ்துவின் போதகமாயின், எங்ஙனம்? எதன் ஹேதுவால் அவித்தையினின்று முண்டான கர்த்திருத்துவாதி உபதேசம் கூறுகின்றது என்று கூறில், சமாதானங் கூறப்படுகின்றது.—

73. பிராந்திப் பிரசித்தியால் அர்த்தத்தை அநுவதித்து, அதன் தத்துவத்தைப் பிராந்திபாதனத்தால், இது அன்று என்று உபதேசிப்பது போன்று அது நீ என்பதும் (என அறிக).

இவ்வர்த்தத்தைத் திருஷ்டாந்தத்தாற் புத்தியின்கண் ஆரோபிக்கின்றார்.—

74. அநுவாத மின்றி ஸ்தாணு ஸ்தாணுவென்னும் வசநமானது புருஷ புத்தியை நிவர்த்திக்காதது போன்று அநுவாத மின்றிய வசநமானது புருஷனது பிராந்தியைப் பாதிப்ப தின்று.

எதனால் சுரோதாவிடத்துப் பிரசித்த அநுவாதியே, த்வம் என்னும் பதம், அதனால் உத்திஸ்யமானமா



யிருத்தலின் துக்கித்தன்மை முதலியன தாத்பரியமேயன்றும். விதீயமானத்தன்மை அங்கீகரிக்கின் விரோதம் பிராப்தமாம். விதீயமான அநூத்தியமானங்கட்கோ யின்று. ஸ்வப்பிரதான பதங்கட்கு விரோத சங்கையாம்; அவை சாமான்யத்தோடுகூடி யிருத்தலின், விபர்யயத்தில் இன்று.—

75. தாத்பர்ய மின்றிய சாமாந்யங்கள் நீங்கப்பட்ட தத் த்வம் பதங்கள்,விடத்தக்கவற்றைக் கூறுவனவல்ல. ஆதலின் அந்யோந்யம் பார்ப்பவைகளே.

சாமாந்யம் நீக்கப்பட்டமையால், அநுவாதமாயிருத்தலானும்,விதீயமானத்தோடுவிரோதித்தலானும், துக்கித்தன்மை முதலியவற்றிற்கு இச்சைப்படி இருக்க. விடத்தக்க அர்த்தங்கட்குச் சம்சர்க்க மின்மை, உபந்நியசிக்கப்பட்ட தோஷ மின்மையின் தத் த்வம் அர்த்தங்கட்கு நீலோத்பலாதி போன்று சம்சர்க்க மிருக்கும் எனின், இங்ஙனமும் பொருத்த மன்று. அதனால்.—

76. தத் த்வம் பதங்களின் முடிவு அத்வய பரோக்ஷ மின்றிய ஆத்மாவாம். அத்விதீய தத் பத லக்ஷியம், பிரத்தியகாத்மா வின்றி ஸ்வரூபத்தை அடைவ தின்று. ஆத்மாவாய த்வம் பத லக்ஷியமும் நித்திய சைதந்யமாய தத் பத லக்ஷிய மின்றி ஸ்வரூபத்தை அடைவதின்று.

இவ்விடத்துக் கூறுகின்றனர்; ஈண்டு விடத்தக்கதா? அல்லது கொள்ளத்தக்கதா? (எனின்), கூறப்படுகின்றது. பிரத்தியகாத்மார்த்தத்தை விதிக்கும் த்வம் பதத்தால், நான் துக்கி பிரத்தியகாத்மா வென்று இரண்டும் தோன்றுகின்றன. அவ்விடத்தும்,பிரத்தியகாத்மாவிற்கு

நான் துக்கி எனனும் இதனேடு சம்பந்தம், ஆத்மாவின் யதார்த்தத்தை அறியாமையைக் காரணமாகவுடையதே. இதனல், அஹம் அர்த்தம் அநர்த்தத்தோடு கூடியிருத்தலினனும், அஞ்ஞாநத்தினின்று முண்டானமையானும், விடத்தக்க தென்று பிரத்தியக்ஷ ஹேதுவால் நிச்சயிக்கப்படுகின்றது. தத் அர்த்தத்தில் விடத்தக்கது யாது? கொள்ளத் தக்கது யாது? என்னும் நிச்சய மின்று (எனின்), அதனல் இது கூறப்படுகின்றது.—

77. அஹம் அர்த்தம் போன்று தத் அர்த்தத்தில் எப்பரோக்ஷத்தன்மை, அது விடத்தக்கதாகின்றது. பிரத்தியகாத்மாவோடு அஹங்காரத்திற்கு (அஞ்ஞாந நிமித்த) அபேதம் போன்று, சாக்ஷி ஸ்வரூப வெனக்கும் பரோக்ஷத்தோடு (அபேதம்அஞ்ஞாந நிமித்தமேயாம்).

எங்ஙனம் அத்விதீய லக்ஷண தத் அர்த்தம், பிரத்தியகாத்மாசிரயமாய இரண்டாவதாந்தன்மை, துக்கித்தன்மையாய அந்நுவயமின்மையை நிவர்த்திக்கின்றது (எனின்), கூறப்படுகின்றது. இவற்றிற்கு நாங்கள் நிவர்த்தக நிவர்த்தியபாவம் புகல்வ தின்று. ஆயின், எங்ஙனம்? பிரத்தியகாத்மாவாய த்வம் அர்த்தத்தில் முன் அறியப்படாத அத்விதீயத்தன்மையாய அது, இதனல் அறிவிக்கப் படுகின்றது. இதனல் அறியாமை நிராசத்தால் அதனினின் றுண்டாய த்வம் அர்த்தத்திலுள்ள இரண்டாவது சத்திற்கும், தத்அர்த்தத்தி லுள்ள பரோக்ஷத்தன்மைக்கும், நிவிர்த்தியாகின்றமையின், வையதிகரண்யாதி சங்கைக்கு இட மின்று என்னும் அவ்விது கூறப்படுகின்றது.

78. தத் அர்த்தம், த்வம் அர்த்தத்தோடு சம்பந்தித்து, நாநாத்தன்மையை நிவர்த்திக்கின்றது.



பரோக்ஷத்தன்மைப் பரித்தியாக மின்றித் தத் அர்த்தத்தைத், த்வம் அர்த்தம் சம்பந்திப்ப தின்று.

எக்காரணத்தால் அத்விதீய லக்ஷண முடைய தத் அர்த்தம், பிரத்தியகாத்மாவாய த்வம் அர்த்தத்தோடு வேறின்றி யிருந்தும், அவித்தையினின்று முண்டாய இரண்டாவது சத்துத்தன்மையை நிவர்த்திக்கின்றது (எனின்), விரோதத்தால் (என்று) கூறப்படுகின்றது.

அது கூறப்படுகின்றது.—

79. அத்விதீயத்தோடு சம்சாரித்தன்மையும், ஆத்மாவோடு பரோக்ஷத்தன்மையும், பிரசங்கத்தால் வந்தனவாம் (ஆகந்துகமாம்). விருத்தமாகலின் அவற்றிற்குத் தத் த்வம் பதங்களால் பாதநமாம்.

தத் த்வம் அர்த்தங்களின் பாதகத்தன்மையில் வேறு காரணமும் கூறப்படுகின்றது.—

80. அஞ்ஞாத புருஷார்த்த ரூபமாகச் சுருதி தாத்பர்ய விஷயமாகலின், தத் த்வம் அர்த்தங்களில், தம தார்த்தத்தைப் பரித்தியாகஞ் செய்யாது, விருத்தங்களின் பாதகங்க ளுண்டாகின்றன.

இங்ஙனம், எங்ஙனம் ஆரம்பித்த பிரக்கிரியா மார்க்கத்தால் பிரத்தியக்ஷாதி வேறு பிரமாணங்களால் விரோத கந்தமும் பொருந்துவ தின்று. எப்பொழுது சர்வப் பிரகாரத்தும் யத்நம் பண்ணப்பட்டவர்கள், இவ்வாக்கியார்த்தத்தை பிரத்தியக்ஷாதி வேறு பிரமாண விரோதத்தானே அடைய வில்லை, அப்பக்ஷத்திலும் கூறப்படுகின்றது.—

81. வாக்கியம், சிலவிடத்து பிரத்தியக்ஷாதி விரோத அர்த்தத்தைக் கூறுமாயின், அது திருஷ்டி

விதி (உபாசனை)யின் பொருட்டாம். சம்சய மின்று; (பஞ்சாக்கினி வித்தையில்) ஸ்திரீயினிடத்து அக்னி பாவம் போன்று.

எப்பொழுது சர்வப்பிரகாரத்தாலும், விசாரித்தும் தத் த்வமசியாதி வாக்கியம், கிரியைபைக் கடாக்ஷத்தாலும் பார்ப்ப தின்று, அப்பொழுது பிரசங்கியானுதி வியாபாரம் பொருந்துவ தின்று. அது கூறப்படுகின்றது.—

82. வாக்கியம், வஸ்துவொன்றனிடத்தே யிருப்பதாயின், அவ் வஸ்துவிற்குக் கிரியார்த்தத்தன்மை உண்டாவ தின்று; வஸ்து ஏகரூபமாகலின், விகற்பமும் பொருந்துவ தின்று.

பின்னவிஷயமாகலானும், வேறுபிரமாண விரோத மின்று. எங்ஙனம்? கூறப்படுகின்றது.—

83. அறியப்படாத அர்த்தத்தை அறிவித்துப் பிரமாணமாகின்றது. அறியப்படாத அர்த்தத்தை அறிவிப்ப தின்றாயின் அது பிரமாணமாவ தின்று; அதனால் பின்ன அர்த்தத்தை அறிவிப்பதாய தத் த்வமசியாதி வாக்கியங்கட்கும் பிரத்தியக்ஷாதிகட்கும் விரோதம் பொருந்துவ தின்று.

எவன் இங்ஙனம் பின்ன விஷயங்கட்கும் விரோதம் கூறுகின்றான், அவன் இவ்விடத்தும் விரோதம் கூறுக.

84. எதனால் சக்ஷுவால் ரூபத்தைப் பார்க்கின்றேன். இச் சப்தம் யாண்டு என்னும் (இவற்றிற்குப் பின்ன விஷயமாகலின் விரோதம்) எங்ஙனம். இன்று, அங்ஙனமே ஆகமங்கட்கும் பிரத்தியக்ஷங்கட்கும் விரோத மின்று.



சத்ரூப பிரமாணங்கட்கு விரோத மின்று; சுரோத்திராதிகட்குப் போன்று பின்ன விஷயமாகலின். எவற்றிற்குப் பின்ன விஷயத்தன்மை அவற்றிற்கு, ஆகு நகுலங்கட்குப் போன்று, பாத்திய பாதக பாவம் நியமமாகவே உண்டாகின்றது. இதனால் அது கூறப்படுகின்றது.—

85. பிரத்தியக்ஷமாயின், சப்தத்தால் (பாதிக்கப்படுவது, அல்லது போதிக்கப்படுவது) அன்று. சப்தப் பிரமாண முடையதாயின், பிரத்தியக்ஷம் யாண்டு? (ஒன்றற்குப்) பிரத்தியக்ஷத்தில் (மற்றவற்றிற்குப்) பிரத்தியக்ஷாபாசமாம். (ஒன்றற்கு) ஆகமத்தில் (மற்றவற்றிற்கு) ஆகமாபாசமாம்.

பிரதிஞ்ஞா ஹேது திருஷ்டாந்த நியாயம் ஈண்டுப் பொருந்துவ தின்று; சப்தாதி (பிரமாணங்)கள் ஒவ்வொன்றும் பிரமாண மாகலின். இதனால் கூறப்படுகின்றது.

86. பிரமாணங்கள் தமது மஹிமையானே அர்த்த ஞானத்தைச் செய்கின்றன. பரஸ்பர சாபேக்ஷைக்கண் ஸ்வயமாக பிராமாண்யம் அங்கீகரிக்கப்படுவ தின்று.

சைதந்ய ரூப ஆத்மாவிற்குச் சுக துக்காதி சம்பந்தம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாற் கிரகிக்கப்படுவ தின்று; எதனால் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களோடு விரோதம் உத்காடநஞ் செயப்படுகின்றது? எங்ஙனம்? கேட்பாயாக.—

87. துக்கித்தன்மை ஆத்ம சமவேதமாயின், அஃது ஆத்மா போன்று பிரமிதி யன்றாம். கர்மத்தினிடத்தே பிரமை யுக்தமாம்; ஓரிடத்தும் கர்த்தாவினிடத்து இன்று.

அங்கீகரிக்கினும், பிரசங்க்யான (விதி) நூருனும் மோக்ஷ மின்மைப் பிரசங்கத்தினின்றும் விடுபட மாட்டீர். இதனுல் கூறப்படுகின்றது.

88. பிரமாணமாய மூலத்தோடு கூடியிருத்தலின், துக்கித்தன்மை அக்நியின் உஷ்ணம் போன்று, யாரால் நிவர்த்தித்தற் காற்றலாம். நிவர்த்தியாகின்ற தெனின், சௌகதமதமாய நிராத்மத்தன்மை அடைவாம்.

அத மதம் (சங்கை).—

89. துக்கித்தன்மையை, நன்கு அநுஷ்டித்த பிரசங்க்யானம், நிவர்த்தி செய்கின்ற தெனின், பிரத்தியக்ஷாதி விருத்தமாகலின், எங்ஙனம் பிரமையை உத்பத்தி செய்யும்?

அற்றேல், பிரசங்க்யான மென்பது, தத்வமசியாதி சப்தார்த்த அந்நுவய வியதிரேக யுக்தி விஷய புத்தியை மீண்டு மீண்டு முண்டாக்கல் என்று கூறப்படுகின்றது. அதுவும், அநுஷ்டிக்கப்பட்டுப் பிரமிதியை விருத்தி செய்தலால் பரிபூர்ணத்தை யுடைய பிரமிதியை உண்டாக்குகின்றது; ஏகாக்கிரத்தன்மையை விருத்தி செய்தலா னன்று. சர்வ அசுசிஸ்தான ஸ்திரீப் பிண (சரீர)த்தில், காமினி என்று வஸ்துவின்றிப் புருஷ ஆயாச மாத்திரத்தா னுண்டான ஞானம் போல் (எனின்), அற்றன்று. எதனுல்.—

90. அப்பியாச மிகுதியால் புத்திக்கு யாது உண்டாகின்றது, அது ஏகாக்கிரத் தன்மையேயாம். பிரமாணங்கள், அப்பியாச அபேக்ஷயால் அர்த்த ஞானத்தை உண்டாகுவன வல.

91. அப்பியாசத்தால் விருத்தி யடைந்த பாவனை சர்வ சம்சாரத்தை நிவர்த்திக்கின்றதெனின்,(அதனுல்) அத்தியந்த நிவர்த்தி யின்று. அப்பலம் பாவனையா னுண்டானதாம்.



மற்றும் கூறப்படுகின்றது.—

92. அற்பகால அப்பியாச ஜன்னிய பாவனையால், கற்பகோடி காலமாக விருத்தியான துக்கியா யிருக்கின்றேன் என்னும் பாவனையும் நாசமாகுமாயின், (பிரஹ்ம பாவனை நிவர்த்திக்கு மென்று சொல்ல வேண்டுவதின்று). ஸ்திர பாவனை என்னு மிதில் என்ன பிரமிதி? (நித்தியத்தன்மையிற் பிரமாண மின்று).

அற்றேல், சாஸ்திரத்தால் நித்தியத்தன்மை உண்டாகின்றது (எனின்), இங்ஙன மன்று; சாஸ்திரம் யதார்த்த நிலையி லிருக்கும் வஸ்து ஞான மாத்திரத்தைச் செய்வதாகலின், சாஸ்திரம் பதார்த்தத்தின் சக்தியை ஸ்தாபனஞ் செய்வ தன்று; லோகத்திலும் பிரசித்தமே.—

93. யாது பாவனையினின்று முண்டான பலமாகின்றது, யாது கர்மத்தின் பலமாகின்றது, அது நித்திய மென்று அங்கீகரிக்கற்க; திரவிடத்தில் சம்பந்தம் போன்று.

ஆத்மாவிற்குத் துக்கித்தன்மை, பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்தமாம்;அங்ஙனமாயினும்,தத் த்வமசியாதி வாக்கியத்தா னுண்டாய ஞானமே பலவான் என்னும் நிச்சயம், வியபிசார மின்றிய பிராமாண்யமாம்; வாக்கியத்தோடு கூடி யிருத்தலின். பிரமேயத்திற்கும் ஸ்வயமே நிர்த்துக்கித்தன்மை சித்தித்தலின், பிரத்தியக்ஷாதியோ வியபிசாரத்தோடுகூடி யிருத்தலின். சம்பாவனையும் புருஷ கற்பனை மாத்திர அவஷ்டம்பத்தானும்.—

94. (ஆத்மாவிற்கு) நிர்த்துக்கித்தன்மை ஸ்வயம் சித்தம். துக்கித்தன்மை பிரத்தியக்ஷாதியால். எவன் பாஹ்யப் பிரமாணத்தால் ஆத்மாவை அனுதரஞ் செய்து விசுவசிப்பான்?

சம்பந்தார்த்தத்தே.—

95. "இந்திரியங்களை பாஹ்யத்திற் செல்லும்படி." என்னும் இச்சுருதியின் வசநத்தானும், பிரத்தியக்ஷ பாதத்தால், ஆத்மாவினிடத்துப் பிரவிருத்தியும் அறியப்படுகின்றது.

அங்கீகரித்து இங்ஙனம் கூறப்படுகின்றது. பிரமாணமா யிருந்து வேறு பிரமாணத்தொடு விரோதமடைவதோ இன்று என்று பன்முறை கூறினோம். எவ்விடத்து வாக்கியத்திற்கும், பிரத்தியக்ஷத்திற்கும் விரோத சங்கை, அவ்விடத்தும் புருஷ மோஹ வசத்தானே அஃது உண்டாகின்றது; பரமார்த்தமாக வன்று. இதனால் கூறப்படுகின்றது.—

96. வாக்கியம், பிரத்தியக்ஷாதி விரோதப் பிரமையை உண்டாக்குமாயின், முக்கியார்த்தம் பொருந்தாமையின், கௌணப் பிரத்தியக்ஷத்தன்மையைக் கூறும்.

அவ்வர்த்தத்தின் சுகப் பிரதிபத்தியின் பொருட்டு உதாஹரணம்.—

97. நன்கு அத்தியயனஞ் செய்யில், இவன் அக்கி, மஞ்சம் உரத்துப் பேசுகின்றது (என்று யோக்கிய மின்றிய சப்தத்தானும் புருஷன்) எங்ஙனம் லக்ஷிக்கப்படுகிறான், அதுபோன்று யோக்கிய மின்றிய அஹம் விருத்தியானும் அவ்வாத்மா லக்ஷிக்கப்படுகின்றது.



எக்காரணத்தால் ஆத்மா நேரே கூறப்படுவதின்று, இக்கற்பனையால் என் (எனின்), அவ்விடத்துக் கூறப்படுகின்றது.—

98. த்வம் என்னும் இப்பதத்தை விட்டு, ஆத்மபோதநத்தில் வேறு மார்க்க மின்று. ஈண்டு த்வம் (பிரமாதா) அர்த்தமும் நன்கு இருக்கின்றது, (அவ்வெல்லாம்) குண சம்பந்தத்தாற் பிரவிருத்திக்கின்றது.

எவ்வேதுவால் நான் என்னும் இதுவும், குணசம்பந்தத்தாற் பிரவிருத்திக்கின்றது, சாக்ஷாத்தாகவேயின்று (எனின்), ஆத்மாவிற்குச் சர்வ கற்பனை யின்றிய காரண ஸ்வபாவமாகலின். இதனால் கூறப்படுகின்றது.—

99. துர்ப்புத்தி யுடையவர்கள், ஆகாசத்தில் நீலம் தூசி மேகம் மலினங்களை எங்ஙனம் கற்பிக்கின்றனர், அங்ஙனமே மூடர்கள் பிரத்தியகாத்மாவினிடத்துச் சம்சாரத்தைக் கற்பிக்கின்றனர்.

அற்றேல், சர்வ கற்பனைகட்கும், அத்மாவினிடத்து அத்தியந்தம் அசம்பவம் சமாநமாகுங்கால், அஹம் விருத்தியில் பக்ஷபாதத்தின்கண் காரணம் யாது? எதனால் வேறு விருத்திகளை விட்டு அஹம் விருத்தியானே ஆத்மா லக்ஷிக்கப்படுகின்றது (எனின்), கூறப்படுகின்றது.—

100. ஆத்மாவிற்குத் தேகாதி அந்நியத்தினின்றும் பிரத்தியகாத்மா போன்று இவ் வஹம் விருத்தி சின்மயமாகின்றது, அதனால் முற் புகன்ற ஹேதுக்களால் ஆத்மா, இச்சப்தத்தாற் கூறப்படுகின்றது.

101. சைதந்யம் கேவலம் இது வென்னும் அர்த்தமாய விருத்திகளால் லக்ஷிக்கப்படுமாயின், அதற்கு அநாத்மத்தன்மை வரும். சுருதியின் வசநங்களும் நாசமாம்.

உரைத்த.—

102. இக்குணலேசத்தால் கர்த்திரு கர்மத்தன்மை அதிக்கிரமித்த அஹம் விருத்தியால், இவ்வாத்மா கூறப்படுகின்றது. இவ்விடத்து சாக்ஷாத் பதத்தாற் கூறப்படுவ தின்று.

"இவ்விடத்துச் சாக்ஷாத் பதத்தாற் கூறப்படுவ தின்று" என்பதன் காரணம் என்னே எனின்.—

103. சப்தப் பிரவிருத்திக்கு நிமித்தங்கள், சஷ்டி (ஆறாம் வேற்றுமை) குண கிரியை சாதி ரூடிகள். இவற்றின் அந்நியதமமும் ஆத்மாவினிடத்து இன்று; அதனுல் ஆத்மா கூறப்படுவ தின்று.

அபிதான அபிதேயத்துவ சம்பந்த அங்கீகாரத்தால், ஆத்மாவினிடத்துச் சப்தம் பிரவிருத்திப்ப தின்ருயின், சப்தத்தால் நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்று சம்யக்ஞாந உத்பத்தி எங்ஙனம்? (எனின்), கூறப்படுகின்றது.—

104. ஆரோபித ரூப உபாயத்தினிடத்திருந்து உபாய மின்றிய ஆத்ம தத்துவம் அடையப்படுகின்றது. ஆத்மத்தன்மையாய காரணத்தாற், குண விருத்தியால் போதிக்கின்றன என அறியப்படுகின்றது.

அபிதானம், அபிதேயத்தோடு சம்பந்த மின்றியிருந்து, அபிதேய மின்றிய அர்த்தத்தில் பிரமையை



எங்ஙனம் உண்டாக்குகின்ற தெனின், கேட்பாயாக. எங்ஙனம் சம்பந்த மின்றியும் அபிதேய மின்றிய அர்த்தத்தில் அவித்தையின் நிராகரண வாயிலாய்ப் போதிக்கின்றது என்று கூறப்படுகின்றது.—

105. எங்ஙனம் நித்திரை செய்பவர்கள், தமது நாமங்களால் போதிக்கப்படின், சஹசமாகவே அறிந்து விழித்துக்கொள்ளுகின்றனர் என்பது அநேகமாக லோகத்திற் பிரசித்தமாம், அங்ஙனமே பிரத்தியகாத்மாவினிடத்தும் (தத்த்வமசியாதி வாக்கியங்களால் சம்பந்தக் கிரஹணமின்றி அறிந்து கொள்ளுகின்றனர்).

106. சரீரத்தினின்றும் பின்னமாய் நித்திரை செய்யும் புருஷனுக்கு, நாமத்தோடு சம்பந்த மின்று. அங்ஙனமாயினும், அச்சப்த சிரவணத்தால், எங்ஙனம் விழிக்கின்ருன், இங்ஙனமே தத்த்வம் என்னும் சப்தங்களால் (சம்பந்தக் கிரஹண மின்றி அறிகின்ருன்).

எங்ஙனம்.—

107. எங்ஙனம் கிருஷ்ண ஆகார ஞான விஷய சம்பந்த நீரூபமும் ரூப முடையதுமாய (அமூர்த்தம் நீரூபம் என்னும்) போதமும், (நீலோத்பலம் போன்று நீலம் என்னும்) அபோதமும், அகாசத்தை ஸ்பரிசிக்காது பாத்திய பாதங்களாகின்றன, அங்ஙனமே ஈண்டு ஆத்மாவினிடத்து (சம்சாரி அசம்சாரித்தன்மைகளைச் செய்யாது நிவர்த்திய நிவர்த்தக பாவம் அல்லது பாத்திய பாதக பாவம்) அறியத்தக்கது.

"ஆரோபித உபாயத்தி லிருந்து" என்று கேட்டு அதிக ஆச்சர்யத்தை அடைந்து மிக்க ஆடம்பரத்தால் ஒருவன் சங்கிக்கின்ருன்.—

